

# அம்ருதா

## Amrudha Tamil Monthly


Volume 17 Issue 10
ஆண்டு 17 இதழ் 10

May 2023 Rs.25
மே 2023 ரூ.25


விட்டல்ராவ்
க்ருஷாங்கினி
இந்திரா பார்த்தசாரதி
கயல்
கிரிஜா புருஷ்
இளங்கோ
கன்பரா யோகன்
செவல்குளம் செல்வராசு
ச. சுரேஷ்
டி. கண்ணன்
ரஞ்ஜனி சுப்ரமணியம்
ந. பெரியசாமி
நா. கோகிலன்
முன்ஷி பிரேம்சந்த்
சந்தியா நடராஜன்
பிரபு திலக்

அதிகரிக்கும் வேலை நேரம்

# உழைப்பே வாழ்வாகும் அபாயம்

ஆண்டு 17 இதழ் 10



# அம்ருதா

நவீன கலை இலக்கிய சமூக மாத இதழ்

மே-2023 விலை ரூ. 25

கௌரவ ஆசிரியர்
**திலகவதி**

ஆசிரியர்
**பிரபு திலக்**



**அம்ருதா**
#5, 5வது தெரு, சோமசுந்தரம் அவென்யூ
சக்திநகர், போரூர், சென்னை-600116
தொலைபேசி: -044-2435 3555, 94440 70000
மின்னஞ்சல்: info.amrudha@gmail.com
இணையம்: www.amruthamagazine.com

Published by Prabhu Thilaak
No. 5, 5th Street
Somasundaram Avenue
Shakthi Nagar, Porur
Chennai - 600 116

And Printed by A. Chandran on behalf of AMRUDHA
Ayyanar Offset, No. 10 Subbarao Nagar
Choolaimedu, Chennai - 600 094

Owner and Editor: Prabhu Thilaak

• அம்ருதா, ஒயிட் லோட்டஸ் தனியார் குழுமத்தின் ஓர் அங்கம்

## இந்த இதழில்...

# எம்.ஜி.ஆர். வருகை

**விட்டல்ராவ்**

அவர் திரும்பி வருவாரா - என்ற கேள்வி பலருக்கும் இருந்தது. அவர் திரும்பி வருவது சந்தேகமே என்ற அரை நம்பிக்கை சிலருக்கு, மகிழ்ச்சி கொண்டனர். சிலர் காவடி தூக்கினர். அலகு குத்திக்கொள்ளுவதாக வேண்டுதல்; பெண்கள் மேல்மருவத்தூர் போன்ற அம்மன்களிடம் வேண்டிக்கொண்டு பால் குடம் தூக்கினர். ஹோமங்களும் யாகங்களும் வளர்க்கப்பட்டன. மொத்தத்தில் ஒரு பெரும் சமூகத்தின் 'பாசிட்டிவ்' எதிர்பார்ப்பாகவே அவரது நலமும் வருகையும் எதிர்பார்க்கப்பட்டது. அவர் படுத்த நிலையிலேயே விமானத்தில் ஏற்றப்பட்டபோது இருந்த இந்திராகாந்தி அம்மையார் அவர் திரும்பி வருவதற்குள் சுடப்பட்டு மரணமடைய, ராஜீவ் காந்தி பிரதமராகியிருந்தார்.

பிறகு அவர் வருவது உறுதியாயிற்று. பலருக்கும் பல்வேறு விதமான அதிர்ச்சிகளை உண்டாக்கிவிட்டு புனர்ஜென்மமெடுத்து அந்தத் தலைவர் வரப்போகிறார் என்பது உறுதியாயிற்று. விமான நிலையத்துக்கு மிக அருகிலும் அங்கிருந்து அவரது இல்லமிருக்கும் ராமவரத்துக்கும் மிக அருகிலுமாயுள்ள ஓர் வெளியில் அவர் இந்தியா (சென்னை) வந்தடைந்ததும் பொது மக்களுக்குக் காட்சி தருவதற்கு ஏற்ற இடமும் தேர்ந்தெடுக்கப்பட்டுவிட்டது. அவ்விடம் எங்கள் செயிண்ட் தாமஸ் தொலைப்பேசி இணைப்பகத்துக்கு நேர் எதிரே ஜி.எஸ்.டி. சாலைக்கு அந்தப் பக்கமாய் சாலையை நெருங்கியிருக்கும் ராணுவத்தின் மொஹிதே ஸ்டேடியம்.

மொஹிதே ஸ்டேடியம் எனப்படுவது புல்தரைபோல புல் வளர்ந்த பெரிய விளையாட்டு மைதானம். புல்லை அவ்வப்போது லான் மோவரைக் கொண்டு சீராக்கி வைப்பார்கள். மொஹிதே என்பது அமரரான ராணுவ அதிகாரி ஒருவரின் பெயர். இந்த மைதானம் ராணுவத்துக்குச் சொந்தமானது. நாற்புறமும் பெரிய பெரிய மரங்களால் சூழ்ந்து நிழல் பாவிய வெப்பம் தெரியாத பெரிய மைதானம். ராணுவத்தினரின் விளையாட்டுப் போட்டிகளும் அணிவகுப்புகளும் இடம்பெறும்.



ஜி.எஸ்.டி. சாலையில் செயிண்ட் தாமஸ் மவுண்ட் தொலைப்பேசி இணைப்பகத்துக்கும் அதையடுத்துள்ள மவுண்ட் தலைமை தபால் அலுவலகத்துக்கும் நேரெதிரே அமைந்துள்ள மொஹிதே ஸ்டேடியத்தில் குதிரை மீது அமர்ந்து விளையாடும் 'போலோ' விளையாட்டுப் போட்டிகள் ஆண்டுதோறும் நடைபெறும். சாலையிலிருந்தவாறே அரிய போலோ ஆட்டத்தைக் கண்டு களிக்கலாம். ராணுவத்தைச் சேர்ந்த போலோ ஆட்டப் பயிற்சி பெற்ற குதிரைகளும் வீரர்களும் நாட்டின் பல்வேறு ராணுவ கேந்திரங்களினின்றும் போட்டியில் கலந்துகொண்டு விளையாட வருவர். சென்னை கிண்டியிலுள்ள குதிரைப் பந்தைய கிளப்பின் குதிரைகள் சிலவும் போலோ ஆட்டப் பயிற்சி பெற்றவை. அவையும் கலந்துகொள்ளுவது உண்டு. நிறைய டீம்கள் போட்டியிட்டு கோப்பையைக் கைப்பற்ற விளையாடி முயற்சிக்கும் இராணுவ விளையாட்டுப் போட்டிகளின் போது அரிய போட்டியான 'எக்வெஸ்டிரிய' எனும் குதிரை மீதமர்ந்து பல உயரமான தடைகளை எம்பி எகிறி தாண்டியோடும் போட்டியும் மொஹிதே மைதானத்தில் நடைபெறும். மைதானத்துக்குச் சற்று தள்ளி மொஹிதே பூங்கா இருக்கிறது.

இந்த மொஹிதே ராணுவ மைதானத்தில்தான் எம்ஜிஆர் விமான நிலையத்திலிருந்து நேராக காரில் வந்து சிறிது நேரம் மக்களுக்குக் காட்சியளித்து விட்டு தன் வீட்டுக்குப் போவதாக முன்னறி விப்புகள் வந்துவிட்டன. பல்வேறு ஊர்களிலிருந்து மாபெரும் நிகழ்வுக்கு கார்களில், லாரிகளில், பஸ்களில், இதற்கென்றே விடப்பட்ட சிறப்பு பேருந்துகளில் தமிழகத்தின் எல்லா மூலை முடுக்குகளிலிருந்தும் மக்கள் இருநாட்களாக வந்து சேர்ந்த வண்ணமிருக்கின்றனர். அத்தனை ஊர்திகளும் பேருந்துகளும் கடற்கரையில் நிறுத்தப்பட்டு வருகின்றன. மற்ற மாநிலங்களிலுமிருந்து அரசியல்-திரைப்பட ரீதியாக மக்கள் அலைமோதத் தொடங்கினர். ராணுவ மைதானத்தில் நிகழ்ச்சி ஏற்பாடு செய்ய இந்திய அரசிடம் ஒப்புதல் வாங்கி யிருப்பதால், ராணுவம் - பாதுகாப்புத் துறைக்கும் தகவல் தரப்பட்டு ஒப்புதலும் பெற்றுவிட்ட நிலையில் ஏற்பாடுகள் ஜரூராக நடந்து வந்தன. தொலைப்பேசி



இலாகாவின் பங்கிற்கு சில வேலைகள் நடந்தன.

மொஹிதே ஸ்டேடிய மைதானத்தில் பெரிய உறுதிமிக்க மேடை போடப்பட்டிருந்தது. விமான நிலையத்திலிருந்து அவரது கார் நேரே மேடையை அடைந்து, தரையிலிருந்து மேடைக்கு கார் சென்றடையும் படிக்கு சரிவுப் பாதையொன்று சாரம் கட்டினாற்போல இரும்பால் கட்டப்பட்டு, காரை கட்டியும் ஒத்திகைப் பார்த்திருக்கிறார்கள். கொஞ்சம் நேரந்தான் அவர் எல்லோரையும் பார்த்து வணங்கிவிட்டு கிளம்பிவிடுவார். எதையும் பேசப் போவதில்லை. ஆனாலும் கூட இருக்கும் அதிகாரிகள், அமைச்சர்கள் அவசரத்துக்கு பேசுவதற்கென்று நான்கைந்து தொலைப்பேசிகளை மேடையருகில் இருக்குமாறு இணைப்பு கொடுத்து வைக்க ஏற்பாடாகி யிருந்தது. அரைமணி நேரத்துக்கொருமுறை அந்த தொலைப்பேசிகளை நாங்கள் ஒருவர் மாற்றி ஒருவராக முதல் நாள் காலையிலிருந்து சோதித்துப் பார்த்தபடியே இருக்கிறோம். ஏராளமான விளக்குகள் ஏற்பாடாகி யிருந்தன. நாங்கள் தற்காலிக தொலைப்பெசி இணைப்புகள்தான் கொடுத்திருக்கிறோம். அவர் வந்துவிட்டு போனதுமே இணைப்புகளைத் துண்டித்து விடவேண்டும். கருவிகளைக் காலையில் லைன்மேன் ஒருவரையனுப்பி எடுத்து வரவேண்டும். லட்சக்கணக்கில் மக்கள் வந்தபடியிருந்தனர்.

போலோ மைதானத்துக்கு வெளியில் ஜிஎஸ்டி சாலையின் இருமருங்கிலும் பொதுமக்களின் உபயோகத்துக்கென நூற்றுக்கணக்கான தற்காலிக கழிப்பறைகள் ஏற்படுத்தப்பட்டிருந்தன. தென்னங்கீற்றுப் படல்களால் நாற்புறமும் மறைப்புகள் வைக்கப்பட்டு உள்ளே குழிதோண்டி புதியதாய்க் கொண்டு வந்த பீங்கான கழிப்பறை சாதனத்தைப் புதைத்திருந்தனர். பந்தோபஸ்து டூட்டியில் ஆயிரக்கணக்கான போலீசாரும் ஹோம்கார்டு ஊழியர்களும் அமர்த்தப்பட்டிருந்தனர். கோவை, சேலத்திலிருந்தும் காவலர்கள் வந்து இறங்கி யிருந்தனர். பெண் காவலர்களும் வெளியூர்களிலிருந்து வந்திருந்தனர். பரங்கிமலை தொலைப்பேசி இணைப்பகத்துக்கு வெளியிலும் உள்ளேயும் அவர்கள் சூழ்ந்திருந்தனர். அவசர பணிக்கென சிலரையும் காலை ஷிஃப்டுகாரர்களையும், போக்குவரத்து நெரிசலை முன்னிட்டும் தொலைப்பேசி அதிகாரிகள் முதல் நாள் இரவே எக்ஸ்சேஞ்சுக்கு வந்து விடும்படி உத்தரவு கொடுத்திருந்தார்கள். பாரத் பந்த் போன்ற நாடு தழுவிய போராட்டம், கதவடைப்பின் போதெல்லாம் எங்கள் துறை இப்படி ஆணை பிறப்பித்து காலை ஷிஃப்டு, மாலை ஷிஃப்டு, இரவு டூட்டிகாரர்களை ஏற்பாடு செய்து வரவழைக்கும்.

ஜி.எஸ்.டி. சாலையில் குறிப்பிட்ட நாளன்று போக்குவரத்து தடை செய்யப்பட்டு, வெளியூரிலிருந்து வரும் வண்டிகாள் வெவ்வேறு மார்க்கங்களில் திருப்பிவிடப்பட்டிருந்தன. அந்த வாரம் முழுக்கவே எனக்கு காலை ஏழு மணி டூட்டி என்பதால், முதல் நாள் இரவே எக்ஸ்சேஞ்சுக்கு வது விடவேண்டுமென்று கூறிவிட்டிருந்தனர்.

புனித தோமய்யர் குன்று தொலைப்பேசி இணைப்பகத்துக்குள் நுழையும் போதே அதிர்ச்சியாக இருந்தது. சைக்கிள் நிறுத்துமிடத்தை ஒட்டி ஆலமரத்தடியில் இரு கூடாரங்கள் காணப்பட்டன. அவற்றுள் சீருடையில் போலீசார் அமர்ந்திருந்தனர். அங்கங்கே நிறைய போலீசார். கட்டிடத்துக்குள் நுழைந்தால் சிருடையில் நிறைய பெண் போலீசார் நடமாடிக் கொண்டிருந்தனர். பெண் போலீசார் எக்ஸ்சேஞ்சுக்குள் அங்கங்கே இருக்கும் தொலைப்பேசிகளை எடுத்து தாராளமாகப் பேசிக்கொண்டிருந்தனர். ஒரு பெண் போலீஸ் என்னிடம் வந்து கேட்டார்: "சார், இந்த டெலிஃபோன்கள் எதிலயுமே எஸ்.டி.டி. கிடைக்க மாட்டேங்குதே. எஸ்.டி.டி. இருக்கிற ஃபோன் எங்கிருக்கு?"

"மேடம், எஸ்.டி.டி. வசதியிருக்கிற ஃபோன் ரெண்டுதான். ஒண்ணு ரூம்லயுமிருக்கு. அந்த ரூம்களை காலைலேதான் அவங்க வந்து திறப்பாங்க", என்றேன் நான்.

அவர்கள் யாவரும் கோவையிலிருந்து வந்திருப்பவர்கள் என்பது தெரிய வந்தது. சற்று வயதானவராய்த் தோன்றிய பெண் காவலர் மெதுவாகக் கேட்டார்: "சார் , இந்த எக்ஸ்சேஞ் கில லேடீஸ் டூட்டி பார்க்கறாங்களா?"

"ஊம் மேடம், அவங்களுக்கு நைட் டூட்டி கிடையாது, காலையில ஒம்பது மணி, பத்துமணி டூட்டிக்கு வருவாங்க."

"ஒண்ணுமில்லீங்க சார், லேடீஸ் ரெஸ்ட் ரூம் இருக்கில்லே?"

"இருக்குங்க மேடம்," நான் சாவிகள் தொங்கும் கண்ணாடி சட்டமிட்ட சிறு அலமாரியைத் திறந்து லேடீஸ் ஓய்வறையின் சாவியை எடுத்துக்கொண்டு மாடிப் படிக்கட்டுகளில் ஏறி அந்தப் பெரிய அறையைத் திறந்தேன். பின்தொடர்ந்து வந்த அந்த பெண் காவலர் நன்றி சொல்லிவிட்டு உள்ளே நுழைந்து கொண்டார் நான் படிக்கட்டில் இறங்கும்போது இன்னும் கொஞ்சம் பெண் போலீசார் எதிர்கொண்டு பெண்கள் ஓய்வறைக்கு வழிகேட்க, திசையைக் காட்டிவிட்டு நகர்ந்தேன், ஆண்களின் ஓய்வறைகள் இரண்டும், உணவு உட்கொள்ளும் அறையும் ஆண் போலீசார் வசமாயின.

மைதான மேடையில் நாங்கள், இணைப்புக் கொடுத்திருந்த தொலைபேசிகளை சோதித்து லாக் புத்தகத்தில் குறித்து வைத்தேன். விமான நிலையத்தில் இறங்கவேண்டிய விமானங்கள் எங்கள் தொலைப்பேசி இணைப்பகத்துக்கு மேலே சமீபமாகவே பறந்து இறங்கும். எங்கள் கட்டிடத்துக்கு மேலே வருகையில் சில சமயம் சில விமானங்களின் சக்கரங்கள் வெளியே வந்துகொண்டிருக்கும். சத்தம் காதை அடைக்கும். அன்று வரும் ஒவ்வொரு விமானத்தையும் பெருகி நிற்கும் ஜனங்கள் ஆவலோடு ஆர்வத்தோடு கவனித்தனர். இன்னும் இரண்டு மணிநேரமிருக்கிறது. எல்லோரும் மொட்டை மாடிக்குச் சென்று நின்றுகொண்டனர். அங்கிருந்து பார்த்தால் மொஹிதே ஸ்டேடியமும், அந்த மேடையும் நன்றாகத் தெரியும். நானும் இன்னும் நேரமிருப்பதால் சாப்பிட்டு விட்டு வந்து விடுவோமென்று கீழே இறங்கினேன். என் மனைவி எட்டு சப்பாத்திகள் பொட்டலம் கட்டிக் கொடுத்திருந்தாள். நான்குக்கு மேலே சாப்பிடமுடியாது. அங்கு தூரமாய் ஒரு நாற்காலியில் உட்கார்ந்து என்னையே பார்த்துக் கொண்டிருந்த போலீஸ்காரரைப் பார்த்துச் சிரித்துக்கொண்டே கேட்டேன்: "சாப்பாடு ஆச்சிங்களா?"

"இல்லீங்க சார்."

"வாங்க சாப்புடலாம், சப்பாத்திதான்."

"வேணாங்க, நீங்க சாப்புடுங்க."

"இருக்குங்க, வாங்க சாப்புடலாம்."

அப்பவும் அவர் தயங்கிவிட்டு எழுந்து என் மேஜையருகாக வந்து நின்றார். நான்கு சப்பாத்திகளை டப்பா மூடியில் வைத்து கூட்டை ஊற்றி அவருக்குத் தந்தேன். சாப்பிட்டுக்கொண்டே நன்றி கூறிவிட்டு, "எனக்கு ஈரோடுங்க. என்னைத் தேர்ந்தெடுத்து இந்த நிகழ்ச்சிக்கு பந்தோபஸ்து டூட்டியில அனுப்பல்லீங்க சார். ஆனா நாந்தான் பிடிவாதமா என்னை அனுப்புங்கனு கெஞ்சி வாங்கிட்டு வந்தேன்," என்றார்.

சரி, எம்ஜிஆர் பக்தனாயிருப்பார்; அதனால் தான் இப்படி என்று நினைத்துக்கொண்டேன். அவர் மீண்டும் பேசினார்: "நான் வந்ததுக்கு ஒரு நோக்கமிருக்குங்க." என்று கூறிவிட்டு தன் பெயர் துரை என்றார். நான் கேட்காமலே தன் கதையைத் தொடர்ந்தார்.

"எனக்கு இவரு தலைவரில்லீங்க. தலைவர்னா அவருதான் தலைவரு. ஆனா இவரு தெய்வம்."

இந்த சமயம் சுவிட்சு ரூம் பானலில் அலாரமடித்தது. போய் அதை நிறுத்திவிட்டு வந்தேன். அவர் தொடர்ந்தார்.

"அவரெல்லாம் அப்படியில்லே. எப்படினு கேளுங்க, அவரு ஆட்சியில, நான் கான்ஸ்டபுளா யிருந்தப்ப, முன்னூறு ரூபா ஒரு பார்டிகிட்டே வாங்கிட்டேனுங்க. அதுகூட நா கை நீட்டி வாங்கினதில்லீங்க. பார்டியாகவே பாத்து எம்

பாக்கெட்லவச்சிட்டாருங்க. பின்னால அவரே செஞ்ச கேஸ் குடுத்து சாட்சி செட்டப் பண்ணிட்டாருங்க. வேலையிலிந்து டிஸ்மிஸ் ஆயிட்டேன். தலைவரைப் போய்ப் பாத்து கெஞ்சினேன். நடக்கல்லே. ரொம்ப கஷ்டப்பட்டேன் மூணு பசங்க. சம்சாரம் சீக்காளி.

"அப்புறம், இவரு சி.எம்.ஆனாரு. சரி, எல்லாரும் சொல்றாங்களே, போய்த்தான் பாக்கலாம்னு தோட்டத்துக்குப் போனேன். செக்யூரிடி உடமாட்டேங்கறாரு. கேட்டுகிட்டயே உட்கார்ந்திட்டேன். வெளியிலே போயிருந்தவரு வந்தாரு. கேட்டைத் தொறந்தாங்க. கார் உள்ளே போயிடுச்சி, அவரைப் பாக்கனும், ஈரோட்லேருந்து வந்திருக்கேனு கத்தினேன். செக்யூரிடி கேட்டைச் சாத்தறாரு. செக்யூரிடியோட போனுக்கு ஐயாவே பேசறாரு, அவரு போனுக்கு அந்தப் பக்கத்தில பேசறதுக்கு செக்யூரிடி பதில் குடுக்கறாரு. "போப்பான்னா கேட்கமாட்டேங்கறாருங்க. ஈரோடாம்," என்று என்னைப் பார்த்தவாறே பேசினாரு.

"சரிங்க, வாப்பா" என்று என்னை கூட்டிகிட்டு மாடி மேலே போய் உட்காரச் சொன்னாங்க. கொஞ்ச நேரம் கழிச்சி கூப்பிட்டாங்க. அவரை நேருக்கு நேரா பார்த்தேன்."

இந்த சமயம் எக்ஸ்சேஞ்சு மஸ்தூர் வந்து தொலைப்பேசியில் என்னை டி.இ. கூப்பிடுவதாகச் சொல்லவும் எழுந்து போய் பேசினேன். மைதான மேடையில் இணைக்கப்பட்டுள்ள தொலைப்பேசிகள் சரியாயிருக்கின்றனவா என்று கேட்டுக்கொண்டார். நேரம் நெருங்கிக் கொண்டிருந்தது. மேஜைக்குத் திரும்பினேன்.

"ஈரோட்ல என்ன செய்யறேனு கேட்டாரு, சும்மாத்தனிருக்கேன். ரொம்ப கஷ்டம்னு சொன்னேன், என் விஷயம் பூரா சொன்னேன். ஒரு மாதிரி பாத்தாரு. கொஞ்சம் வெளியில் இருக்கச் சொல்லிவிட்டு செகரட்ரிய கூப்பிட்டு என்னவோ சொன்னாரு. செக்ரட்ரி வந்து என்னோட பேப்பர் எல்லாத்தையும் வாங்கிட்டுப் போனாரு. செகரட்ரி திரும்பி வந்து என் ஃபைலைத் திருப்பிக் கொடுத்துவிட்டு, ஒரு மாசத்தில வேலைக்கு ஆர்டர் வரும், போங்கள் என்றார்.

"அரை நம்பிக்கையோடத்தான் திரும்பி ஊருக்குப் போனேன்,. சாப்பிடாவிட்டால் சாப்பிட்டுவிட்டு போகும்படி கூறி அந்த இடத்தைக் காட்டியனுப்பினார். உள்ளே போய் கால்லே விழுந்து கும்பிட்டேன். அவர் எதுவுமே பேசல்லே. ரெண்டு மாசம் கழிஞ் சப்ப, ஈரோட்டுக்கே எனக்கு போஸ்டிங்க் ஆர்டர் வந்திட்டது, இவருதான் எனக்கு தெய்வம். தெய்வம் வேறே, தலைவன் வேறே. அதனால தெய்வத்தைப் பாத்தே தீரணும்னுதான் பந்தோபஸ்துநீட்டிய கேட்டு வாங்கிட்டு வந்திருக்கேன்," என்று தன் கதையை முடித்தார் கான்ஸ்டபுள் துரை.

மொஹிதே மைதானம் பெரிய பெரிய விளக்குகளால் பகல் போல காட்சியளித்தது. அந்தப் பெரிய கார் மெதுவாக வந்து சரிவுப் பாதையிலேறி மேடையைடையந்தது. அவர் நடித்த ஒரு படத்தில் என்று நினைவு, ஒரு பாட்டு, அது இந்த சந்தர்ப்பத்துக்கு மிகவும் பொருத்தமானது.

"நான் செத்துப் பொழைச்சவண்டா."

எங்களுக்கிருந்த கவலையெல்லாம் கடைசி நிமிடம் வரை நாங்கள் அவசரகால நடவடிக்கையாக இணைப்புக் கொடுத்திருக்கும் தற்காலிக தொலைப்பேசிகள் நான்கும் எவ்வித வில்லங்கமுமின்றி இருக்க வேண்டுமே என்பதுதான்.

மோசமான நிலையில் பறந்து சென்று பயங்கர சிகிச்சைக்குப் பிறகு உயர் பிழைத்து தாய்நாடு திரும்பி நடமாடி தன்னைக் காண வந்து கூடியிருக்கும் தன் மீது அபார அபிமானமும் அன்பும் கொண்டுள்ள தன் மக்களைக் காண்பதில் அவர் பெற்ற அதிர்ச்சி கூடிய பெரு மகிழ்ச்சி அழுகையாக வெளிப்பட்டது. அவருக்குப் பேசும் திறன் போய்விட்டிருந்தது. அவர் அழுதார். அது நடிப்பல்ல. பொதுவாக திரைப்படங்களில் அழவேண்டிய காட்சிகளில் அவரால் சரியாக அதைச் செய்ய முடிந்ததில்லை. முகத்தை மூடிக்கொள்ளுவார் என்றும் அல்லது சுவரைப் பார்த்துத் திரும்பிக்கொண்டு முதுகைக் காட்டுவார் என்றும் விமர்சிப்பவர்களுண்டு. அதையே வேற்று மொழியில் நடிகர்கள் செய்கையில், 'அண்டர்ப்ளே' பண்ணி நடிக்கிறார் என்று உயர்த்திப் பேசுபவர்களும் உண்டு. ஆனால், இன்று இங்கு அவர் தம் மக்களை அவர்தம் மாபெரும் அன்பைக் கண்டு அழுதார். அது நடிப்பல்ல. அதுதான் அவர். இந்த அழும் முகத்தை அருகாமைக் காட்சியில் சில பிரபல ஆங்கில பத்திரிகைகள் வெளியிட்டிருந்தன. அவ்வளவு தான் - அரை மணி நேரமோ என்னவோ - ஆட்டம் க்ளோஸ். ஆனால், மக்கள் கூட்டம் கலைந்தும் கலையாது கண்டது கனவா - நனவாவென்று பேசிய படி அசையத் தொடங்கிற்று.

மறுநாள் விடிந்து வெளிச்சம் வந்ததும் ஜி.எஸ்.டி. சாலையில் 'ஆஷீர்கானா' பஸ் நிறுத்தப் பகுதியிலும், சாலைக்கு இரு மருங்கிலும் அமைக்கப்பட்ட தற்காலிக கழிப்பறைகளில் புதைக்கப்பட்டிருந்த நூற்றுக்கணக்கான பீங்கான் பேசின்களைக் காணோம். அதுவே அன்றைக்கும் அடுத்த நாளைக்கும் இன்னும் வரும் நாட்களுக்குமான பேச்சாக நிலைத்தபோது, தொலைப்பேசி இணைப்பக ஊழியர் ஒருவர் கேட்டார்: "நாம வச்ச டெம்பரரி டெலிபோனுங்கெல்லாம் பத்தரமா வந்து சேர்ந்தாச்சா?"

"ஆமாம்", என்று தெம்மின்றி யாரோ முனுமுணுத்தாற்போலிருந்தது.

(தொடரும்)

# சால்விடார் டாலியின் காலம் சொட்டிக்கொண்டிருக்கிறது, துளித்துளியாய்

**கிருஷாங்கினி**

**ஓவியம்: சால்வடார் டாலி**

சமையல் அறையின் குழாய் ஒழுகிக்கொண்டே இருக்கிறது, சொட்டுச் சொட்டாக. சமையல் அறையின் 'சிங்' இப்போதெல்லாம் எவர்சில்வரில் வந்துவிட்டது.முன்னாட்களில்அதுகடப்பாகற்களால் உருவானதாகவோ அல்லது சிமெண்டால் ஆன தொட்டியாகவோ இருக்கும்.எவர்சில்வர் கழுவுவதற்கு சுலபம் பார்ப்பதற்கும் அழகு. மினுமினுப்பு. ஆனால், எப்போதும் பாத்திரங்கள் மோதும் ஒலியுடன்தான் எல்லா வேலைகளையும் செய்யவேண்டி இருக்கிறது. பாத்திரம்தேய்க்கும்போது அதுவும்ஒருபாத்திரத்தைப் போல சப்தமிட்டுக்கொண்டே இருக்கும். உரசல் இரு பக்கமும். எனவே, சப்தமும் அதிகம்.

சில வேளைகளில் மிக அதிகமாகவே. 'சிங்'கில் நீர் சொட்டும் சப்தம். தன் சப்தத்தைவிடவும் அதிகமாகவே வெளிப்பட்டுக்கொண்டிருந்தது. ஒவ்வொரு நீர் சொட்டும் பெரும் சப்தத்துடன் அந்த சிங்கில் விழுந்து கொண்டிருந்தது. இரவும் பகலும் நீர் சொட்டும் சப்தமும் அது மெட்டலில் விழும் ஒலியும் என ஒரு பின்னணி இசை இருந்து கொண்டிருந்தது. தூக்கம் வராத நாட்களில் அந்த ஓசை பெரிதாகிக் காதினுள் நுழையும். கீழே பாத்திரம் வைத்தால். அது சிறிது நிரம்பும் வரையில் அதே மெடல் ஒலி. சிறிது நிரம்பியவுடன் ஒலி சிறிதளவு குறையும். பாத்திரம் நிரம்பியவுடன் பாத்திரத்தின் நீரிலிருந்து விழுந்து சிதறிய நீர் சுற்றிலும் தெளித்திருக்கும். ஒலி இல்லாமல் போனாலும்கூட அந்த ஒலி இருப்பதாகவே மனம் இரவும் பகலும் எண்ணிக் கொண்டிருக்கும். இவை அம்பையின் கதையை நினைவுபடுத்திக்கொண்டும் இருக்கும்.



ஆள் வந்து குழாயைச் சீராக்கிக் கொடுத்துவிட்டான். குழாயின் வாஷர் மாற்றினால் போதுமானதாக இருந்திருக்கும். ஆனால், சமையல் அறையில் பிளாஸ்டிக் பைப்புகள் சில நாட்கள் மட்டுமே பயன் தரும். அந்த அறையில் பல தடவை குழாய் திறந்து திறந்து மூடப்படும். நீர் பிடிக்க, கழுவ என் சமையலறையின் குழாயின் பயன்பாடு தவிர்க்க இயலாத ஒன்று. அதையும் எவர்சில்வர் குழாயாக மாற்றினால். கூடுதலாகச் சில காலம் பயன் தரலாம். இப்போதெல்லாம் எல்லாமே - மனிதர்கள் உட்பட - யூஸ் அண்ட் த்ரோ தான். பணியிடமாயினும் வீடாயினும் உறவாயினும். வாகனங்கள் போல மனிதர்களும் பயன்பாட்டிற்காகவே தயாரிக்கப்பட்டவர்கள். பிறகு தூக்கி எறியப்படவும் தயாராக இருக்க வேண்டும். இந்தச் சூழலில் பைப் எம்மாத்திரம்?

ஆள் வந்து குழாயைச் சரிசெய்த நாளன்று காதிற்குப் பெருத்த ஏமாற்றம். எந்தவிதமான ஒலியும் அற்ற இரவில் உறக்கம் வரவில்லை. சமையல் அறையில் அது மகிழ்ச்சியையோ தொந்தரவையோ கொடுக்கவில்லை. அந்த ஒலி நிறைந்திருந்த அந்த அறையும் உறைந்து கெட்டிப்பட்டிருந்தாற் போலத்தான் இருந்தது.

அன்றிரவு காதுகள் கூர்மையாக ஒலியை எதிர்நோக்கிக் கொண்டு இருந்தன. ஒலியற்ற நிலையே ஒரு பேரொலியாக இருந்தது. அது முகத்தில் அடித்தது. சிறிது நேரத்திற்குப் பிறகு சமையலறையில் இருந்து திரும்பவும் ஒலி எழும்புவதாகத் தோன்றியது. சில வினாடிகள் மனதிற்குள் குழப்பம். மனம் அந்த ஒலிக்கு அடிமையாகி



விட்டதோ? இல்லாத ஒலிக்கு ஏற்ப மனம் பேதலித்து ஆடுகிறதோ? சில நொடிகள் எதுவும் புரியாமல் தன் மனநிலையையும் அதன் இயல்புத்தன்மையையும் மறுபடியும் கொண்டுவந்தாள், அவள். ஆனாலும் ஒலி என்னவோ எழும்பிக்கொண்டே தான் இருந்தது. இருட்டில் டார்ச் விளக்குடன் மெல்ல சமையறையில் நுழைந்து சிங்கை எட்டிப் பார்த்து நின்றாள். குழாயிலிருந்து நீர் சொட்ட வில்லை. ஒலியும் எழுப்படவில்லை. இந்த முறை எவர்சில்வர் குழாய் போட்டுவிட்டதால், அது புடவையும் ரவிக்கையும் ஒரே துணியில் இருந்தாற்போல ஒட்டி உறவு கொண்டு வேற்றுமை பாராட்டாதுதான் இருந்தன. பிறகு எங்கிருந்து இந்த ஒலி? எதுவும் புரியவில்லை. இருள், தனிமை, உறக்கமின்மை, தேவையற்ற எண்ணங்கள்.

திடீரென அவளுக்குத் தெரியவந்தது, ஒலி சிங்கிலிருந்து அல்ல. அதற்கு மேற்புறத்தில் மாட்டி யிருந்தகடிகாரத்திலிருந்துஎழும்புகிறதுஎன.காலத்தின் ஒலியும் பேரோலமாக அறைக்குள் நிரம்பிக் கிடந்தது. சரியாக சிங்கிற்கு மேற்புறம் மாட்டியிருந்த அந்த கடிகாரம் சீராகத் தனது நொடி முள்ளை இயக்கிக் கொண்டிருந்தது. ஒலியை எழுப்பிக்கொண்டும் இருந்தது. சிறிது நேரம் இன்னமும் உன்னிப்பாக அந்த ஒலியைக் கேட்டுக்கொண்டே இருந்தாள்.

பார்க்கப் பார்க்க அந்த ஒலி திட வடிவம் பெற்றது. காலம் திட உருவம் ஏந்தி சொட்டுச் சொட்டாய்க் கீறங்கிக்கொண்டு இருந்தது. காலத்தின் ஒவ்வொரு ஒலிக்கும் இடையில் இடைவெளி. காலத்தின் சொட்டுகள் இடைவெளிக்குள் உறைந்துதிடப்பொருள் ஆகிவிட்டன. ஒவ்வொரு நொடியும் தனைத்தனியே அந்த சிங்கில் இறங்கிக் கொண்டிருந்தது. ஓடும் போதே திட வடிவம் பெற்றுக்கொண்டது. நீரில் சொட்டிய மெழுகுச் சொட்டுகள் என அவை தனித் தனியே நின்றன. மிதந்தன. ஜிங்கில் வழிந்து கொண்டிருந்தது காலம் காலம் எங்கு போகும்? நிகழிலிருந்து கடந்த காலத்திற்கு எப்படி உருமாறப் போகிறது? அதை தீர்மானமாகக் கண்டுபிடிப்பதற்காக அவள் காலத்தையும் அதிலிருந்து வழியும் காலச் சொட்டுகளையும் விடாமல் உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தாள். காலம் நிகழிலிருந்து இறந்த காலமாக மாறும் அந்த எல்லைக்கோடு அவள் கண்களுக்குப் புலப்படவே இல்லை. அது கண்களுக்குத் தெரியாமலேயே இருந்தது. மாற்றம் புலப்படவில்லை. மாற்றம் கொண்டபிறகு புலப்படுகிறது.

காலம் சொட்டிக் கொண்டிருந்தது, அந்த கடிகாரம் உருகி காலத்தைச் தன்னிடமிருந்து சொட்டுச் சொட்டாய் கீழிறக்கிக் கொண்டு இருந்தது, சல்வடார்



டாலியின் கடிகார காலம் போல. காலம் நெளிந்து உருகி ஓடிக் கொண்டு இருந்தது. தன்னால் காலத்தைப் பிடித்து நிறுத்த முடியாமல் அவள் தவித்தாள். என்ன செய்வது என்று மலைப்பாக இருந்தது அவளுக்கு. இந்த கடிகாரம் உருகி முடிந்தவுடன் காலம் என்ன ஆகும்? காலம் தீர்ந்து போய்விடுமா என்று தோன்றியது. அல்லது மறுபடியும் உடனேயே உருவாகி விடுமா? காலம் சூரியனில் இருக்கிறதா கடிகாரத்திலா? காலம் காலண்டரில் இருக்கிறதா கடிகாரத்திலா? காலம் ஏன் தனித்தனிச் சொட்டாக இருக்கிறது? ஏன் நொடிகள் ஒன்றுக்கொன்று இணைவதில்லை? எல்லோரும் தனித்தனியா? அல்லது ஒன்றுடன் ஒன்றா? ஒன்றினால் மற்றொன்றா?

அவள் காலச் சொட்டுக்களைப் பின் தொடர்ந்து செல்லத் தீர்மானித்தாள். காலச் சொட்டுகளுடன் அவளும் பயணப்பட்டாள். காலம் சிங்கில் இறங்கியது. சிங்கில் இறங்கிய காலம் சிங்கில் இருந்து வெளியேறும் துளை வழியாக வெளியே வந்தது. அவளும் திரவமாக மாறி அத்துடன் இணைந்து பயணம் செய்தாள். இதுதான் காலத்திற்கேற்ப வாழ்தலோ?

காலச் சொட்டுகள் ஒன்றுடன் ஒன்று இணையாமலேயே தனித் தனியாக நீர் மேல் உதிர்ந்த மெழுகுச் சொட்டுகள் என நீரில் மிதந்து கொண்டிருந்தன. அது ஜிங்கின் வழி கீழிறங்கி தெரு சாக்கடைக்குள் இறங்கியது. தெருச் சாக்கடையில் சில காலத்துளிகள் பயணப்பட்டு காலச் சொட்டுகள் சாக்கடையை அடைந்தன. அந்த நீரிலும் காலச் சொட்டுகள் எந்தவிதமான மனமாற்றமோ விருப்பு வெறுப்போ இன்றி பயணம் செய்தன. காலம் தன் போக்கில் வரிசையாக அல்லது சில நேரம் வரிசையற்றும் பயணப்பட்டது. காலத்தின் சொட்டுகள் வர வர காலம் நீரினுள் விலகி வரும் சொட்டுகளுக்கு வழி ஏற்படுத்திக் கொடுத்ததையும் கண்டாள். சாக்கடையிலிருந்து காலச் சொட்டுகள் பாதாள சாக்கடையை அடைந்தன. அவை பாதாள சாக்கடையில் நீண்ட தூரம் பயணம் செய்து, பிறகு நகரத்தின் நடுவில் ஓடும் சாக்கடை நதியில் மிதந்தன. அதுவும் ஒரு காலத்தில் நன்னீர் ஓடும் நதியாகத்தான் இருந்தது. அதிலும் காலம் சொட்டிக் கொண்டிருந்தது என்பது அவளுக்கும் காலத்திற்கும் நன்றாகவே தெரியும். சாக்கடை நதியில் மிதந்த கால சொட்டுகள் இறுதியாக கிழக்குப் புறத்தில் சூரிய உதயத்தில், மதியத்தில், அஸ்தமனத்தில், இருட்டில் நட்சத்திர ஒளியில், நிலவொளியில் மழையில், வெயிலில், குளிரில், பேரொலியில், நிசப்தத்தில் என அனவரதமும் சொட்டிச் சொட்டி மிதந்து மிதந்து கடலை அடைந்தன.

கடல் காலத்தின் அனைத்துச் சொட்டுகளையும் தன் மடியில் ஏந்திக்கொண்டது. சொட்டுகள் தனித்தனியே கடலலையில் மிதந்து திரிந்தன. காலச் சொட்டுகள் காலம் பார்த்துக் கொண்டிருந்தன. கடலுக்குள் இருக்கும் மீனின் முட்டைகள் உடைந்து வெளி வரும் சமயத்தை எதிர்பார்த்துக்கொண்டு காத்திருந்தன. முட்டை உடைந்து வெளிவரும் சமயம் இரண்டு சொட்டுகள் அதன் கண்களாக ஆயின. இரண்டு தனித்தனிச் சொட்டுகளும் இணைந்து ஒன்றாகப் பார்த்தன. இணைந்த சொட்டுகள் தனித்தனியாக இருப்பதைப் போலவே தோற்றம் தந்தன.

காலம் இப்போது கண்களாக. கண்கள் காலத்தையும் கவனித்துக்கொண்டு இருந்தன. காலச் சொட்டுகள் வீணாவதில்லை, கண்களாகி விடுகின்றன. காலம் உள்ள வரை அது தொடர்ந்து கொண்டு இருக்கும். அது சிங்கில், சாக்கடையில், பாதாளச் சாக்கடையில், சாக்கடை நதியில் இறுதியாக கடலில் என பயணித்துக் கொண்டே இருக்கும். கடல் வற்றாது. மீன்கள் இல்லாமல் போகாது. காலமும் நிற்காது. மீன்களும் இல்லாமல் போகாது. அதற்குக் கண்களின் தேவையும் இல்லாமல் போகாது. மீனகளின் முட்டைகளும் இல்லாமல் போகாது. காலத்தின் சொட்டுகள் வீணாகாது. காலத்தின் எண்ணற்ற சொட்டுகள் கடலின் அடி ஆழத்திலும் கடலின் மேற்புறத்திலும் சிறியதாகவும் பெரியதாகவும் உருக்கொண்ட மீன்களின் மூலம் உலகைக் கண்காணித்துக் கொண்டே இருக்கும். உலகம் காலத்திற்கு கட்டுப்பட்டது. காலம் வெளிக்குக் கட்டுப்பட்டது. வெளியற்ற காலமும் காலமற்ற உலகமும் ஒரு போதும் சாத்தியமாகாது.

கிருஷாங்கினி <nagarajan63@gmail.com>

# பாரதியின் அகமும் புறமும்

இந்திரா பார்த்தசாரதி

பாரதியின் 'கவிதைக் காதலிக்கு' ஒரு மறு வாசிப்புத் தேவை.

கவிதையில் காணும் கதை: பாரதி கூறுவது உபநிஷதத்தில் வரும் கதை.

ஒரு முனிவன் பன்றியாகப் போகச் சபிக்கப்படுகிறான். பன்றியாக போனதும் தன்னைக் கொன்றுவிடும்படித் தன் மகனிடம் கூறுகின்றான் அம்முனிவன். மகன் கொல்ல முற்படும்போது, மகனிடம் சொல்வான் முனிவன்: "மகனே என்னைக் கொல்லாதே. சில நாட்கள் நான் பன்றியாக இருக்க விரும்புகின்றேன். இவ்வனுபவம் எப்படி இருக்கின்றது என்று பார்க்கிறேன். பிறகு கொல்லலாம்."

சில நாட்கள் கழித்து மகன் அவனைக் கொல்ல வரும்பொது, பன்றி உருவிலிருந்த முனிவன் கூறுவான், "மகனே! பன்றியாக இருப்பது எவ்வளவு சுகமாக இருக்கின்றது தெரியுமா? நான் மறுபடியும் முனிவனாக மாற விரும்பவில்லை. உனக்கு நான் பன்றியாக இருப்பது பிடிக்கவில்லை என்றால் நீ தற்கொலை செய்துகொள்."

இதற்குப் பின் பாரதி முத்தாய்ப்பாகக் கூறுவதுதான் பாரதிக்கு மறு வாசிப்புத் தேவை என்று எனக்கு அறிவுறுத்தியது.

பாரதி சொல்கிறார்:

வாராய்! கவிதையாம்
மணிப் பெயர்க் காதலி!
அந்த நாள் நீ யெனை
அடிமையாகக் கொள
யாம் மானிடர்க் குழாத்தின்
மறைவுறத் தனி இருந்து
எண்ணிலா இன்பத்து
இருங்கடல் திளைத்தோம்'
(ஆனால்)
அடிநா முள்ளினை
அயல் சிறிது ஏகி
களைந்து பின் வந்து
காண்பொழுது அய்யகோ!
மறைந்ததுதெய்வ மருந்துடைப்
பொற்குடம்!'
சின்னாள் கழிந்தபின்
யாதெனச் செப்புகேன்
நின்னொடு வாழ்ந்த நினைப்புமே
தேய்ந்தது!'

பன்றிக் கதையாகிய இந்த உபநிடக் கதை. அதன் மூலம் தமக்கேற்பட்ட அநுபவத்தைக் கூறுகிறார் பாரதி.

'பன்றி வாழ்க்கை' என்பது எது? அவர் எட்டையபுரத்தில் ஜமீந்தாருடன் இருந்த வாழ்க்கை அனுபவமா அல்லது அவர் மனத்தை அரித்துக் கொண்டிருந்த வேறு விஷயம் ஏதாவது இருக்குமா?



இளம் வயதில் நாமகளிடம் காதல் பூண்டு (மூன்று காதல்) கவிதைக்காகவே தம் வாழ்க்கையை அர்ப்பணிக்கத் துணிந்த அவர், பின்னர் வேதனை உறுவதற்கான காரணம் என்ன?

'பாரதி தேசியக் கவிஞர், நாட்டு

விடுதலைக்காக மக்களைத் தம் கவிதைகள் மூலம் தட்டி எழுப்பிய எழுத்துச் சிற்பி. சமூகச் சிறுமைகளைச் சாடியவர். சரித்திரம் இதற்கென்றே அவரைத் தேர்ந்தெடுத்தது' என்றெல்லாம் நாம் பாரதியைப் பற்றிக் கூறுகிறோம். பாரதி வாழ்ந்த காலத்தில் சொல்லவில்ல என்றாலும், அவர் இறந்த பிறகு சொல்லி வருகிறோம்.

ஆனால், பாரதி தம் கவித்துவத்தின் எல்லை இதனுடன் முடிந்துவிட்டது என்று தமக்குள் நினைத்திருக்கக் கூடுமா அல்லது அவருடைய அந்தரங்க மனத்தில் வேறு குரல் ஒலித்திருக்குமா என்று சிந்திக்க வேண்டுமென்று தோன்றுகிறது.

பாரதியின் அந்தரங்கக் குரல் எது, பகிரங்கக் குரல் எது?

'பராசக்தி' என்ற கவிதையில், பாரதி கூறுகிறார்: 'நாட்டு மக்கள் பிணியும் வறுமையும் களையப்' பாட நான் நினைத்த போது, 'கூட்டி மானுடச் சதியை ஒன்றெனக் கொண்டு வையம் முழுவதும் பயனுறப் பாட்டிலே அறங்காட்ட' நான் முற்படும்போது, 'அன்னை பராசக்தி ஏழையேன் கவிதை யாவும் தனக்கெனக் கேட்கின்றாள்.'

'பராசக்தி' யார்?

'அல்லினுக்கும் பெருஞ்சுடர் காண்பவர் அன்னை சக்தியின் மேனி நலம் கண்டார்'. 'கல்லினுக்குள் அறிவொளி காணுங்கால், கால வெள்ளத்திலே நிலை காணுங்கால், புல்லினுள் வயிரப்படைக் காணுங்கால், பூதலத்தில் பராசக்தி தோன்றுமே.'

இன்னோர் இடத்தில் பாரதி கூறுகிறார்: 'பாட்டினில் வந்த களியே (Ecstasy) சக்தி! 'அதாவது கவிதையும் தெய்வமும் வெவ்வேறில்லை, கவிதையே தெய்வம் என்று உணர்ந்து வாழ்வதுதான் வாழ்க்கை' என்பது பாரதியின் கருத்து. பாட்டினில் வரும் களிக்குச் சான்று வேண்டுமா? அவருடைய 'ஊழிக் கூத்தே' உதாரணம். கருவும் உருவும் இயைந்துக் களிநடம் போடுவதைப் பார்க்கலாம்!

பாரதியின் குரல், இத்தகைய கவிதைகளை இயற்றும்போது, உலகுக்கு உபதேசம் செய்ய வேண்டியது தம் சமூகப் பொறுப்பு என்பது போல் ஒலிக்கவில்லை. கவிதைக் காதலிக்கும் அவருக்குமிடையே நிகழும் அந்தரங்க உரையாடல் போல் ஒலிக்கின்றது.

கடமை புரிவர் இன்புறுவர்
என்னும் பண்டைக் கதை பேணோம்
கடமை அறியோம் தொழில் அறியோம்
கட்டென்பதனை வெட்டென்போம்.
மடமை, சிறுமை, துன்பம் பொய்
வருத்தம், நோவு, மற்றிவை போல்
கடமை நினைவும் தொலைத்திங்கு
களியுற்று எங்கும் வாழ்குவோமே!

மேலும், 'அன்பு செய்தல்' என்ற கவிதையில் கூறுகிறார்; 'இந்தப் புவியில் வாழும் மரங்களும் இன்ப நறுமலர்ப் பூச்செடிக் கூட்டமும் அந்த மரங்களைச் சூழ்ந்த கொடிகளும் ஓடை, மூலிகை, பூண்டு புல் யாவையும் எந்தத் தொழில் செய்து வாழ்கின்றனவோ?'

மானுடர் வாழாவிடினும் வித்து நடாவிடினும்
வரம்பு கட்டா விடினும் அன்றி நீர் பாய்ச்சாவிடினும்
வானுலகு நீர்தருமேல் மண்மீது மரங்கள்
வகைவகையாய் நெற்கள் புற்கள் மலிந்திருக்குமன்றோ!
யானெதற்கும் அஞ்சுகிலேன், மானுடரே நீவிர்
என் மதத்தைக் கைக்கொள்ளுமின்
ஊனுடலை வருத்தாதீர் உணவு இயற்கை கொடுக்கும்
உங்களுக்கு இங்கே தொழில் அன்பு செய்தல் கண்டீர்!'

ஆகவே பாரதியிடம் தொடக்கத்திலிருந்தே ஒன்றுகொன்று மாறுபடுவன போன்ற மனநிலைகள் இருந்து வந்திருக்கின்றன.

கவிஞன் என்ற நிலையில் அழகுணர்ச்சிக் கோயிலின் கர்ப்ப கிருகத்திலிருந்து அழகை உபாசிப்பதுதான் தம் வாழ்க்கை நெறி என்று அவர் நினைக்கின்றார். ஆனால், அரசியல், சமூகக் கொந்தளிப்பு மிகுந்த சூழ்நிலையில், காலத்தின் சவால்களை ஏற்க வேண்டிய சமூகப் பொறுப்பு உணர்ந்த ஒரு சமுதாய மனிதனாக வாழ வேண்டுமென்று விழைகின்றார்.

கவிஞன் என்ற நிலையில் தமக்குத் தாமே சொந்தமானவராகவும் அடிமையுற்ற நாட்டின் குடிமகன் என்ற நிலையில், வரலாற்றுக்குச் சொந்தமானவராக அவர் இருப்பதுந்தான் சுவாரஸ்யமான விஷயம். இதனால், அவருக்கு ஓர் அந்தரங்கக் குரலும் பகிரங்கக் குரலும் உருவாகி இருக்க வேண்டும்.

'குயில் பாட்டு', அவர் அந்தரங்கக் குரல். 'தேசிய கீதங்கள்' சமூகப் பிரச்சினைப் பற்றிய பாடல்கள், அவருடைய பகிரங்கக் குரல்.

பாரதியின் வரலாற்றைப் பார்க்கும்போதுதான் இவ்விரு குரல்களின் பரிணாம வளர்ச்சியை நம்மால் புரிந்துகொள்ள முடியும்.

பாரதி தம் பதினெட்டாம் வயதில் 'கனவு' என்ற தலைப்பில் தம்முடைய சுயசரிதையை எழுதியிருக்கிறார்! அவரே அதைப் 'பரிசோதனைக் கவிதை' என்கிறார். தம்மைதாமே அறிந்துகொள்ள முயலும் இவ்வற்புதக் கவிதை, அவருடைய இளமைப் பருவத்தை அழகாகப் படம் பிடித்துக் காட்டுகிறது.

அவருக்கு ஐந்து வயதாக இருக்கும்போது அவர் தம் தாயை இழக்கிறார். பிற குழந்தைகளோடு விளையாடுவதை அவர் தந்தை விரும்பவில்லை. இதனால் அவருக்குத் தனிமையே சொர்க்கமாகின்றது.



கனவு காண்பது அவர் பழக்கமாகிவிடுகிறது.

தம் பத்து வயதில் ஓர் ஒன்பது வயது பெண்ணைக் காதலிக்கின்றார். அல்லது, காதல் கொண்டதாக நினைக்கின்றார். பாலுணர்வுடன் சம்பந்தப்படாத தெய்வீகக் காதல் என்கிறார். (Platonic Love). அவர் தந்தை அவரை ஓர் ஆங்கிலப் பள்ளியில் சேர்க்கிறார். இக்கல்வி அவருடன் ஒட்டவேயில்லை. பனிரெண்டு வயதில் திருமணம். இதனால், அவருக்குத் தம் தந்தை மீது சலிப்பு ஏற்படுகின்றது. திடீரென்று தந்தை வறியவராகின்றார். வியாபாரத்தில் பெருத்த நஷ்டம். இந்த வேதனை காரணமாகத் தந்தை இறந்து விடுகிறார். குடும்பப் பொறுப்பை ஏற்க வேண்டியது பாரதியின் கடமை ஆகின்றது.

பத்து வயதில் அவர் காதல் கொண்டதாகக் கூறுவது உண்மையில் நடந்திருக்கக் கூடிய சம்பவமா ? அல்லது அவ்வாறு நடந்ததாகக் கற்பனை செய்து, பிறகு ஒரு நிலையில் அவரே அதை நம்பியிருக்கூடுமா ?

பாரதியின் பாடல்களிலும் சரி, உரைநடைகளிலும் சரி, இந்தக் கனவுகள் அடிக்கடி வருகின்றன. 'ஞானரத'த்தில் ஒரு பெண் அவருக்கு வழிகாட்டியாக வருகிறாள். இந்தப் பெண் இனத் தோற்றமே பாரதிப் படைப்புக்களின் அடிநாதம்.

இத்தாலியக் கவிஞர் தாந்தே இயற்றிய 'லாவிட்டன் நோவா'விலும் பியாட்ட்ரிஸ் என்ற ஒன்பது வயதுப் பெண், பாரதியின் கனவுக் கன்னிகைபோல், அவருக்கு ஒளி விளக்காக இருக்கிறாள். பாரதி 'இவ்விளம்பெண் தோற்றத்தை'த் தம் இந்திய மரபுக்கேற்ப தம் கவிதைகளில் ஒருங்கிணைத்துக் கொள்கிறார்.

தாகூரைப் போல் செல்வ வசதியும் உலகப் பயண அனுபவமும் இல்லாவிட்டாலும் பாரதத்தின் தென் கோடியில் இருந்தவாறே உலக நடப்புகளைப் பற்றி தீர்க்கதரிசனத்துடன் பாடிய, இந்தியாவின் முதல் தேசியக் கவிஞராகிய பாரதி, தாந்தேவின் நூல்களைப் படித்திருக்கக் கூடும்.

பாரதியின் ஜீவ சக்தி இந்தப் பெண் தோற்றப் படிமந்தான். அவருடைய மனநிலைக்கு ஏற்ப இந்தத் தோற்றம் வெவ்வேறு வடிவம் கொள்கின்றது. அவர் வழிபடும் சக்தியாக, அவர் காதலிக்கும் கண்ணம்மாவாக, அவர் தம் வாழ்க்கையை அர்ப்பணித்த பாரத மாதாவாக.

ஐந்து வயதில் அவர் இழந்த தாயைப் பற்றிய அடிமன நினைவுதான் பல படிமங்களில், பாவனைகளில் தோற்றம் கொண்டிருக்க வேண்டுமென்று தோன்றுகிறது. சிறுவயதில் இழந்த தாயை வாழ்நாள் முழுவதும் தேடிப் பல வடிவங்களில் கண்டிருக்கிறார் பாரதி.

சமூகத் தளைகள் எவையுமற்ற ஒரு கற்பனை நாட்டின் பிரஜையாக, குடும்பப் பொறுப்பு ஏதுமில்லாத ஒரு கவிஞனாக வாழ வேண்டுமென்று அவர் விழையும்போது அவருடைய அந்தரங்கக் குரல் ஒலிக்கிறது. ஆனால், இளம் வயதிலேயே குடும்பப் பொறுப்பு அவர் மீது விழுகிறது, மனச் சுதந்திரம் வேண்டி நின்ற அவரை நாட்டின் அடிமைத்தனம் வெகுண்டு எழச் செய்கிறது. இது அவர் சமூகப் பொறுப்பு. இம்மனப் போராட்டத்தை பாரதியின் முழு படைப்புக்களைப் படிக்கும்போதுதான் புலனாகும்.

'குயில் பாட்டு' அவருடைய அந்தரங்கக் குரல். 1912இல் வெளியான இக்கவிதையை, அவர் 'பட்டப் பகலில் பாவலர்க்குத் தோன்றுவதாம் நெட்டைக் கனவு' என்று குறிப்பிடுகின்றார்.

இக்கவிதையில் வரும் இறுதி வரிகள் மிகவும் முக்கியானவை.

'ஆன்ற தமிழ்ப் புலவீர்!

கற்பனையே யானாலும் வேதாந்தமாக விரித்துப் பொருளுரைக்க

யாதேனும் சற்றே இடமிருந்தால் கூறீரோ?'

பண்டித உலகத்தைக் கவிஞர் கிண்டல் செய்கிறார் என்று சற்றும் உணராமல், தமிழ்நாட்டுப் பல்கலைக்கழகங்களின் பண்டிதத் தொழிற்சாலை யினின்றும் ஆன்மீகமாகவும் அறிவு ஜீவித்தனமாகவும் இப்பாடல் பற்றிய ஆராய்ச்சி விளக்கங்கள் உற்பத்தியா

யின.

பாரதி இதைக் 'கனவு' என்கிறார். காலரிட்ஜின் 'குப்ளாகான்' போன்ற ஒரு கவிதைக் கருவூலம். நிகழ்வன அனைத்தும் தோற்றங்கள். தோற்றத்துக்குள் ஒரு தோற்றம், சக்கரத்துக்குள் ஒரு சக்கரம் போல் தொடர்கிறது. இறுதியில், எது தோற்றம், எது நடப்பு என்று புரியவில்ல! யதார்த்தத்தைக் குறிக்கும் சொற்கள், 'பண்டைச் சுவடி, எழுதுகோல், பழம்பாய்'. அவ்வளவுதான்.

'குயில் பாட்டு' ஒரு பரிபூரணக் கவிதை'. (Pure Poetry for its own sake) இலக்கிய விமர்சனத் தளைகள் ஏதுமின்றி ஒரு பிரபஞ்ச மொழியில் இயற்றப்பட்ட அழகுணர்ச்சிக் காவியம். கவிஞன் தன்னில் தான் ஆழ்ந்து இதைப் பாடியிருக்க வேண்டும். உலகை உய்விக்க வேண்டிய நோக்கம் இதில் எதுவும் கிடையாது. படிக்கின்றவர்களின் அழகுணர்வு அனுபவத்தோடு நேரடியாக நிகழ்த்தும் உரையாடல்.

இது பாரதியின் அந்தரங்கக் குரல். அவருடைய 'அகம்'.'புறம்','தேசியக்கீதங்கள்', சமுதாயப் பாடல்கள் அனைத்தும். பண்டையத் தமிழ் இலக்கிய மரபை ஒட்டி வீளக்கிச் சொல்ல வேண்டுமென்றால் இவ்வாறுதான் கூற முடியும். ஆனால், அதுவும் தேவையில்லை.

ஷெல்லி எந்த அளவுக்கு அவரைப் பாதித்திருக்கிறான் என்பதை அவர் படைப்புக்கள் முழுவதையும் படித்தால்தான் விளங்கும். ஷெல்லிக்கு 'Power', பாரதிக்கு 'சக்தி'.

இந்திரா பார்த்தசாரதி
<parthasarathyindira@gmail.com>

# முயங்கொலிக் குறிப்புகள்

**கயல்**

ஓவியம்: **நடேஷ்**



## 11
## இரண்டு துரோகங்களின் சந்திப்பு

நிலங் கண்ட
சூல்மேகத்தின்
அவசரத்துடன்
என்னைத் தழுவிய
நீ இரகசியமாய்
நம் திருமண மோதிரத்தைக்
கட்டிலருகே கழற்றி வைத்தபோது
முதன் முதலில்
பிசிறு தட்டியது.

பிறகோர் நாள்
தேன் பருந்தென இதழ் அருந்துதலுக்கு
இடையே
மெல்ல நகர்ந்து
என் புகைப்படத்தைத் திருப்பிவைத்ததும்
தெளிவானது.

ஆனால்,
உன் துரோகம் உறுதியானது
என் கூந்தலில் முகம் புதைத்த நீ
என்றுமில்லாத் திருநாளாக
இசை வழிகிற
குரலில் அம்மு என்ற இரவில்தான்.



ஒரு நொடி
அதிர்ந்துபோய்விட்டேன்.

உறங்கும் உன்னைப் பார்த்தபடி
சடுதியில் அலைபேசி
எண்களை ஒற்றி
கவனமாய் இருக்க வேண்டியதன்
அவசியத்தைப்
பதறிய குரலில் அவனிடம் கிசுகிசுத்தபின்
தூங்கப்போகிறேன்.

முதுகு காட்டிப் படுத்துத் தூங்கும் நம்மைச் சுமந்தபடி
கலைந்து கிடக்கிறது
இதயவடிவப் படுக்கைவிரிப்பு.

## 12
## தோற்றப் போலிகள்

பாசிக் குளத்தில்
கால் நனைத்து
மீனுக்கு பொரி இறைத்து
அவசரமின்றி நடந்து
பிரகாரங்கள் சுற்றிப் பின்
தரிசிக்கக் கிடைக்கும்
இறையருகே கால் பிடித்தமர்ந்திருக்கிற
சர்வ அலங்காரியைப் போல
என்னையும் எண்ணிக்கொள்வேன்
வீடுதிரும்பும் வழியெங்கும்.

உன் அப்பனுக்கும்
என் அப்பனுக்கும்
பரஸ்பரம் நம்மைப் பிடித்துப்போக
கட்டிலோடு சேர்த்து என்னையும்
கட்டிவைத்த பிறகான எல்லா
இரவுகளிலும்
கேள்வியற்றுத் தாமரைகளுள்
தாவித் துள்ளுகிற தவளைகளை
நினைத்தபடி இறுகக் கண்மூடிக் கிடப்பேன்.

துளிர்த்துத் தளும்பும் கண்ணீரைப்
பரவசத்தின் வெளிப்பாடாகவே
நினைத்துக்கொள்கிற உன்னிடம்
எப்படிக் கோபப்பட?



நீலப்படப் பெண் முக உணர்வுகளை
நீ நிசமென வரித்திருக்கிறாய்
தேவதைக் கதை ராஜகுமாரன்களை
நான் நம்பியதுபோல.

வா,
போலச் செய்வோம்
இன்றிரவும்
இனி
நீ வெறிகொண்டெழும் சில பகல்களிலும்.

## 13
## போதுமா...?

முதற் புடவை தேர்ந்தெடுத்த
அரை மில்லியன் நொடிக்குள்
கேட்பாய்.

அம்மா வீட்டுக்குப் போய் நான்
ஆசைச் சீராடிய அடுத்தநாள்
காலையில் அலைபேசியில்
வினவுவாய்.

தவறிவிழுந்த என் ஒற்றைச் சொல்லால்
உன் உறவினர் முகஞ் சுளிக்க
புருவ உயர்த்தலில் தெரிவிப்பாய்.

நதியாழத்துக் கூழாங்கல்லென
பேழைக்குள் பத்திரப்படுத்திய
உக்கிரமான பதிலுடன்,
பலகாலமாகக் காத்திருக்கிறேன்!

சபிக்கப்பட்ட
அந்தக் கட்டிலில்
சயனிக்குமுன்
நீ
ஒரு முறையாவது
கேட்பாயென.

தொடரும்

**கயல் <dr.kayalvizhi2020@gmail.com>**

# கடைசி சோறு

**கிரிஜா புருஷ்**

ஓவியம்: ஆபா வதேரா

“கமலா, ஏன் அகிலா வீட்டு முன்னால ஒரே கும்பலா இருக்கு?”

“அக்கா, ஒனக்கு தெரியாதா? அகிலா செத்துப்போய்ட்டா,” என்று வசந்தியிடம் கமலா சொன்னாள்.

“என்னது, காலைல 6 மணிக்கு நான் தண்ணி பிடிக்க போகும் போது அகிலா அவ வீட்டு முன் கோலம்போடறது பார்த்தனே” என்றாள் வசந்தி.

இவர்களோடு பக்கத்து வீட்டு பரிமளாவும் சேர்ந்துகொண்டாள்.

“இது என்னக்கா, காத்தால 10 மணிக்கு நானும் அகிலாவும்ஒன்னாதான் காய்கறிவாங்கப்போனோம்.”

“அட அதவிடுங்க. அகிலாவை மதியம் 12 மணிக்கு பாத்தனே. அவ திண்ணையில் உக்காந்து பூக்கட்டிக் கிட்டிருந்தாளே. ஒரு மணிக்கு ஆளே இல்லைன்னு ஆயிடுத்து.”

“நேற்றிருந்தார் இன்றில்லை. இன்றிருப்பார் நாளை யில்லைன்னு சொல்லுவாங்க. இங்க காலைல இருந்தவ மதியமே இல்லைன்னு ஆயிடுச்சே.”

“நல்லா இருந்தவ எப்படி திடீர்னு செத்தா?”

“அவளுக்கு ரத்தகொதிப்பு இருக்காம். மருந்தெல்லாம் ஒழுங்கா தான் சாப்பிட்டு வந்தாளாம். இருந்தும் மாரடைப்பினால் செத்துப்போய்ட்டா. கொரோனா பிரச்சினையால செக்கப்புக்கு போயிருந்திருக்க மாட்டா போல...”

“எப்ப எடுக்கப் போறாங்க?”

“அகிலாவுக்கு சொந்த ஊர் நாகர்கோயில். அங்கிருந்து அவ சொந்தக்காரங்க எல்லாம் வர வேணாமா. நாளைக்கு காலையோ அல்லது மாலையோதான் எடுப்பாங்க.”



“ஒரு எட்டு இப்பபோய் பாத்துட்டு வந்துடலாமா?”

மூவரும் ஒன்றாக அகிலா வீட்டுக்கு சென்றனர்.

அகிலாவின் குடும்பம் ஒரு அழகான சிறிய குடும்பம். கணவர் சீனு மிக நல்ல மனிதர். ‘புகை - புட்டி - குட்டி’ போன்ற பழக்கமில்லாத தங்கமான மனிதர். அவரது பலசரக்கு கடை அந்த ஊரில் மிகவும் பிரசித்தி பெற்றது. அவர்களுக்கு இரு பையன்கள். பெரியவன் பத்தாவதும் இளையவன் எட்டாவதும் படிக்கின்றனர். பெற்றோர்க்கு கட்டுப்பட்ட பிள்ளைகள். நன்றாக படிக்கக்கூடியவர்கள்.

அகிலாவின் வீடு ஒரு சிறிய ஓட்டு வீடுதான். வெளியே இருபுறமும் திண்ணை. வராந்தாவைத் தாண்டி ஓர் அறை. பின்கட்டில் சமையலறையும் குளியலறையும்.

வீட்டைச் சுற்றிலும் நிறைய மரங்கள். மாமரமும் பலாமரமும் வேப்ப மரமும் நிழல் தர, மகிட மரம் நறுமணத்தைக் கொடுத்துக் கொண்டிருந்தது. வாசலில் இருந்த மல்லிகைப் பந்தல் வீட்டுக்கு அழகு சேர்த்தது.

வீட்டைச் சுற்றிலும் ஆண்களும் பெண்களும் கும்பல் கும்பலாக நின்றிருந்தனர். அகிலாவை நடுவீட்டில் ஒரு பெஞ்சின் மீது கிடத்தியிருந்தனர். பெண்கள் சிலர் மூவர் நால்வராகச் சேர்ந்து ஒப்பாரி வைத்து அழுது கொண்டிருந்தனர். ஒரு புறம் மாலைகள் குவிந்திருந்தன. மாலைகளிலிருந்த சம்பங்கி, சாமந்தி பூக்களின் வாசனையும் ஊதுவத்திகளின் புகையும் ஓதகொலோனின் மணமும் சற்றே குமட்டலைக் கொடுத்தது.

கமலாவும் வசந்தியும் பரிமளாவும் ஒன்று சேர்ந்து அழுதனர். “நல்ல புருஷனோடயும் அருமையான புள்ளங்களோடயும் வாழக்கொடுத்து வைக்காம இப்படி



அற்பாயுசுல போய்ட்டியே" என்று சொல்லி அழுதனர்.

இன்னும் சிலர் உள்ளே வரவும் அவர்களுக்கு இடம் தர வேண்டி இவர்கள் மூவரும் வெளியே நகர்ந்தனர். சற்று காற்றோட்டமாக இருக்க தோட்டத்தின் பின்புறம் சென்றனர். அங்கிருந்து சமயலறை நன்றாக தெரிந்தது. அங்கே அவர்கள் கண்டது அவர்களை மிகவும் ஆச்சரியப்பட வைத்தது.

அகிலாவின் கணவரும் இருபிள்ளைகளும் அடுப்பங்கரையில் சாப்பிட்டுக் கொண்டிருந்தனர். முருங்கைக் காய் சாம்பாரும் அவரைக் காய் பொரியலும் போல. வாசனை மூக்கைத் துளைத்தது.

சீனுவின் கண்களில் நீர் தாரை தாரையாக வழிந்து கொண்டிருந்தது. பெரியவன் அழுது கொண்டிருந்தான். இடது கையால் கண்ணீரைத் துடைத்துக் கொண்டிருந்தான். சிறியவன் பாவம். புரிந்தும் புரியாத வயது. கண்களையும் மூக்கையும் சட்டைக் கையால் துடைத்துவிட்டுக் கொண்டிருந்தான்.

"சீக்கிரமா சாப்பிடுங்களப்பா" என்றார் சீனு. அவருக்கு கண்ணீரை கட்டுப்படுத்த முடியவில்லை. இருப்பினும் சிறு சிறு கவளங்களாக சாப்பிட்டுக் கொண்டிருந்தார்.

பெரிய பிள்ளைக்கு சாப்பிட முடியவில்லை. துக்கம் தொண்டையை அடைக்க சில பருக்கைகளை மட்டுமே வாயில் போட்டுக் கொண்டிருந்தான். சிறியவன் அப்பாவைப் பார்த்தபடி அமர்ந்திருக்க சீனு மீண்டும் கூறினார் "சீக்கிரமா சாப்பிடுங்களப்பா. இழவு வீட்டில் சாப்பிடக்கூடாதுதான். ஆனால், இது உங்க அம்மா செஞ்ச சோறு. நமக்காக அவ செஞ்ச கடைசி சோறு. இது எக்காலத்துக்கும் நமக்கு திரும்ப கிடைக்கப்போவதில்லை" எனக்கூறி கதறிக் கதறி அழுதார். பிள்ளைகளும் சேர்ந்து கதறினர்.

இதைக்கண்டு ஜன்னல் வழியே பார்த்துக் கொண்டிருந்த பெண்கள் மூவரும் துக்கத்தை அடக்க முடியாமல் குலுங்கிக் குலுங்கி அழுதனர்.●

# தொ. பத்தினாதனின் 'அந்தரம்'

இளங்கோ

அந்தரம் - தொ. பத்தினாதன்; விலை ரூ. 250.00; வெளியீடு: காலச்சுவடு பதிப்பகம், 669 கே.பி.சாலை, நாகர்கோயில் - 629001; தொலைபேசி: +914652278525; மின்னஞ்சல்: kalachuvadu@sabcharnet.in

ஈழத்தில் நிகழ்ந்த உள்நாட்டுப் போரால் பல இலட்சக்கணக்கான மக்கள் தமிழகத்திற்குப் புலம்பெயர்ந்திருக்கின்றார்கள். உலகிலேயே அதிக தமிழர்கள் வாழ்கின்ற நாடாக இந்தியா இருந்தாலும், இந்தியாவே இப்படி அகதியாகப் போன தமிழர்களை வேறெந்த நாடுகளை விடவும் மோசமாக நடத்தியிருக்கின்றது. ஈழத்தில் உள்நாட்டுப் போர் முடிந்து பத்தாண்டுகளுக்குப் பிறகும்கூட, இன்னமும் அப்படியேதான் அந்த அகதிகளை நடத்திக் கொண்டிருக்கின்றது.

இந்தியாவுக்கான இந்தப் புலம்பெயர்வு 1983இல், 1990களில், 2006இல் பெருமளவில் நிகழ்ந்ததாக 'அந்தரம்' நாவலில் சொல்லப்படுகின்றது; என்றாலும், இந்தப் புனைவில் 1990களில் ஈழத்தில் இருந்து நிகழ்ந்த புலம்பெயர்வே அதிகம் பேசப்பட்டிருக்கின்றது. அந்தப் பின்னணியில் சாந்தி என்கின்ற பெண்ணையும் அவரின் குடும்பத்தினரையும் அந்த குடும்பத்தைச் சுற்றி நடைபெறும் பல்வேறு சம்பவங்களையும் இந்த நாவல் பேச முயல்கின்றது.

சாந்தி யாழ்ப்பாணத்தில் இளவாலையைச் சேர்ந்தவர். கணவர் இராணுவத்தால் கொல்லப்பட, அவரது மூன்று பிள்ளைகளையும் கருவில் இன்னொரு பிள்ளையையும் காவிக்கொண்டு வன்னிக்குள் இடம்பெயர்கின்றார். அங்கே மனைவி, பிள்ளைகள் கனடாவில் இருக்கும் ஓர் ஆணோடு சேர்ந்து குடித்தனம் நடத்தத் தொடங்குகின்றார். யுத்தம் மோசமடைய இவர்கள் குடும்பமாக இந்தியாவுக்குப் புலம்பெயர்கின்றனர். கொஞ்சக் காலத்தில் இந்த ஆணை கனடாவில் இருக்கும் மனைவி அங்கே கூப்பிட்டு விட, சாந்தி தனித்து தன் இரண்டு மகள்களையும் இரண்டு



மகன்களையும் தமிழகத்து அகாதி முகாமிற்குள் வைத்து வளர்க்கின்றார்.

தமிழகத்தில் இருக்கும் அகதி முகாங்களில் நிலைமை பற்றி நாமெல்லோரும் ஏற்கனவே அறிந்ததே வைத்திருக்கின்றோம். விளிம்புநிலையினருக்குள் விளிம்புநிலையினராய் வாழ நிர்ப்பந்திக்கப்பட்ட அவர்களுக்கு முறையான எந்த ஆவணங்களும் இருப்பதில்லை. அதனால் அடிப்படை வசதிகளையே பெற உரிமையற்றவர்களாக இருக்கின்றனர். இந்திய அரச அதிகாரிகளின் சுரண்டல்கள், க்யூ பிராஞ்ச்காரர்களின் 24 மணிநேரக் கண்காணிப்பு, ஒழுங்கான வருமானமின்மை என எத்தனையோ இடைஞ்சல்களுக்கிடையில் சாந்தி தன் பிள்ளைகளை எப்படியோ வளர்த்துவிடுகின்றார்.

தமிழகத்தில் நூற்றுக்கும் மேற்பட்ட அகதி முகாங்கள் இருக்கின்றன. அதில் மதுரையில் இருக்கும் அகதி முகாமில் இருந்து முதன்முதலாக வெளியே கல்லூரிக்குப் போன ஒரிருவர்களில் சாந்தியின் மகள் சசியும் இருக்கின்றார். ஆனால், எவ்வளவு படித்தாலும் உரிய ஆவணங்களின்றி அகதி என்றே பதியப்பட்டிருப்பதால் அவர்களுக்கு எந்த நிறுவனமும் வேலை கொடுப்பதில்லை. படிக்காதவர்கள் மட்டுமில்லை, படித்த ஆண்கள் கூட இறுதியில் அவர்களின் 'தேசிய தொழில்' என எள்ளலாகச் சொல்லப்படுகின்ற பெயின்ட் அடிப்பதற்கே செல்கின்றார்கள். அதற்கும் கூட க்யூ பிராஞ்ச், ஆர்ஐக்களால் ஆயிரத்தெட்டு கெடுபிடிகள்.

இதற்கு மத்தியில் ஒரு சிறு நிறுவனத்துக்கு வேலைக்குப் போகின்ற 20 வயது சசிக்கு, அவரை விட 15



வயதுகள் கூடிய, ஏற்கனவே திருமணமாகிவிட்ட ஒரு சுப்பர்வைஸரோடு காதல் வந்து, அவர்கள் இருவரும் ஊரைவிட்டு ஓடிவிடுகின்றார். மோகம் நூறு நாள் போல, ஒருவருடத்தோடு சசியின் உறவைத் துண்டித்துவிட்டு, அந்த சுப்பர்வைஸர் தன் மனைவி, பிள்ளைகளோடு சேர்ந்துவிட, சசி கருவுற்ற நிலையில் மீண்டும் அகதி முகாமிற்கு வேறு எந்த வழியும் தென்படாது திரும்புகின்றார்.

சசியின் தாயான சாந்தி மட்டுமில்லை, அந்த அகதி முகாமை கண்காணிக்கும் அதிகாரவர்க்கமும் சசியை மீண்டும் அங்கேயோர் அகதியாகப் பதிவு செய்ய மறுக்கின்றது. இவ்வாறு தன்னையொரு அகதியாக அந்த முகாமில் பதிவு செய்கின்ற முயற்சியில் சசி இருக்கின்றவேளையில் எமக்கு இரண்டாம் பாகத்தில் பல பெண்களின் கதைகள் கூறப்படுகின்றன. ஒவ்வொரு அத்தியாயமாக செல்வி, வதனா, சீலா, (கறுப்பு) ராணி, மீனா போன்றோர்களின் கண்ணீர்க் கதைகள் கூறப்படுகின்றன. வறுமையும் சோகமும் உறவுப் பிறழ்வுகளுமென இந்தப் பெண்கள் வாழ்வின் அத்தனை கசப்புகளுடனும் ஏமாற்றங்களுடனும் தொடர்ந்து வாழ முயற்சிக்கின்றனர்.

மூன்றாம் பாகத்தில் முகாம் ஆண்களாகிய அமுதன், வரதன், ரூபன், பெரியதம்பி, (கறுப்பு) காந்தன், கந்தசாமி, முருகனாந்தன் போன்றவர்களின் கதைகள் சொல்லப்படுகின்றன. சில ஆண்கள் வேலைக்குப் போகின்றார்கள், சிலர் வேலைக்குப் போகாது பிறரையும் பெண்களையும் சுரண்டி வாழ்கின்றனர். இன்னு... சிலர் அதிகாரத்தோடு ஒத்தோடி, முகாமிலிருப்பவர்களிடம் இலஞ்சம் வாங்கி தம் வாழ்வைச் சொகுசாக கொண்டு செல்ல முயற்சிக்கின்றார்கள்.

இவ்வாறாக பெண்களினதும் ஆண்களினதும் வாழ்க்கைகளினுடாகவும் அவர்கள்படும் அவலங்களின் ஊடாகவும் அகதி முகாம் வாழ்க்கை பற்றிய சோகச் சித்திரத்தை பத்தினாதன் நமக்கு வரைந்து காட்டுகின்றார். விளிம்புநிலையில் அவர்கள் வாழ்ந்தாலும் அவர்களுக்குள் உறவுப் பிறழ்வுகளும் கிசுகிசுக்களும் கோள்மூட்டல்களும் ஒற்றுமையின்மையும் எல்லாச் சமூகங்களிலும் இருப்பதுபோல இருக்கின்றன. கத்தோலிக்க ஃபாதர் வந்து முகாமில் வழிபாடைச் செய்யத் தொடங்க, அங்கேயிருக்கும் மன்னார் மக்களுக்கும் முல்லைத்தீவு மக்களுக்கும் எங்கே வைத்து வழிபாடு செய்வதென்று பிரச்சினை வருகின்றது.

கத்தோலிக்கர் வழிபாடு செய்வதைப் பார்த்து, சைவர்களும் பிள்ளையார் கோயில்

தொடங்குகின்றார்கள். 'இந்த எளிய சாதிகள் பூசை செய்ய நாங்கள் இந்தக் கோயிலுக்குப் போவதா' என்று ஆதிக்கசாதியினர் மற்றப் பக்கம் அம்மன் கோயில் கட்ட முயற்சிக்கினறனர். இவ்வாறு தமிழர்கள் எங்கிருந்தாலும் இந்த விடயங்களில் 'கல்தோன்றா முன் தோன்றிய மூத்தகுடிகள்' என்பதைத் தெளிவாக நிரூபிக்கின்றனர்.

இவர்கள் சொந்த நாட்டுக்கு மீளவும் போகவும் முடியாமல், புகுந்த நாட்டில் உரிமைகள் மறுக்கப்பட்டும், தமிழகம் எங்கும் நூற்றுக்கணக்கான அகதி முகாங்களில் வெட்டவெளிகளில், வெறும் கூடாரங்களோடும் ஓலைக் குடிசைகளோடும் வாழ விடப்படுகின்றார்கள். அதற்குள் இருந்தும் அவர்கள் நேசிக்கின்றார்கள். மேலும் முகாமிற்குள் இருக்கும் இந்த அவல வாழ்வு வேண்டாமென ஊர்க்காரர்களை நேசிக்கும்போது, ஊர்க்காரகளால் பயன்படுத்தப்பட்டு கைவிடப்படுகின்றார்கள். இன்னும் சில கருணை மிகுந்த ஊர்க்காரர்கள் முகாமிலிருக்கும் பெண்களை மணந்துகொண்டு முகாமிற்குள் தங்கிவிடவும் செய்கின்றார்கள். முகாமிற்குள் கஞ் சா, பெண் விநியோகம் நடக்கின்றன. தற்கொலை செய்கின்றார்கள். அவ்வப்போது கொஞ்சம் கியூ பிராஞ்ச்காரர்களோடு முரண்டுபிடிக்க, எந்தக் கேள்விகளுமில்லாது வருடக்கணக்கில் மிகமோசமான பூந்தமல்லிச் சிறைகளில் அடைக்கப்பட்டு வாழ்வைத் தொலைக்கின்றார்கள். இவ்வாறு நாம் நினைத்தே பார்க்க முடியாத எண்ணற்ற கதைகளை 'அந்தரம்' நமக்குக் காட்டுகின்றது.

2000களின் நடுப்பகுதியில் அகதி முகாங்களில் பதிவு செய்யப்படாதவர்கள் கட்டாயம் பதிவு செய்யப்படவேண்டும் என்கின்ன்ற அரசாணை வர, நூற்றுக்கும் மேற்பட்ட முகாங்களில் பதிவு செய்யப்படாத ஆயிரக்கணக்கான இந்த அகதிகள் இராமேஸ்வரம் செல்கின்றார்கள். அங்குள்ள அதிகாரிகளோ இந்த மக்களை மனிதர்களாக மதிக்கத் தயாராக இல்லை. ஒரு வாரத்துக்கும் மேலாக வெட்டவெளியில் மிக மோசமாக நடத்தப்படும் பகுதிகள் சோகத்தை வரவைப்பவை.

இறுதியில் சாந்தியின் மூத்த மகள் சரோ ஒருவனைத் திருமணம் செய்து இலங்கை திரும்புகின்றாள். ஊர்காரனால் கர்ப்பமாக்கப்பட்ட சசிக்கு, அந்த குழந்தையை வளர்ப்பதோடு மிச்சமுள்ள வாழ்க்கை கழிகின்றது. சாந்தியின் மூத்தமகன் வசந்தன் (பிற்பகுதியில் ரூபன் என்று தவறாக வருகின்றது) ஊர்க்காரப் பெண்ணைக் காதலித்து திருமணம் செய்கின்றான். அந்தப் பெண்ணை அவளின் அக்காவின் கணவருக்கு இரண்டாந்தாரமாக திருமணம் செய்து முயற்சிக்க, அந்தப் பெண் வசந்தனோடு ஊரைவிட்டு ஓடுகின்றாள்.

இந்தப் பெண்காரர், ஊரின் ஆதிக்கசாதியினராக இருப்பதால், அந்த சாதிக்கார ஆட்கள் முகாமைக் கொளுத்துவோம், உள்ளேயிருப்போரை வெட்டுவோம் என்று சண்டைக்கு வந்துவிட பொலிஸ்தான் இடைபுகுந்து சமாதானம் செய்கின்றது. அவ்வாறு ஓடிப்போய் திருமணம் செய்த சோடி பின்னர் முகாமிற்குள் திரும்பும்போது ஓர் அசம்பாவிதம் நிகழ்கின்றது. சாந்தியின் மூத்த மகன், குடிபோதையில் இருக்கையில் - வேறு இருவர் ஒரு காதல் விடயம் சார்ந்து ஒருவனுக்கு அடிக்கப்போக - இவன் அவர்களோடு சேர்ந்து குடிபோதையில் கல்லைத் தூக்கிப் போட்டு ஊர்க்காரன் ஒருவனைக் கொன்றுவிடுகின்றான். கொலைக் குற்றத்துக்காய் வசந்தன் மத்திய சிறைக்குப் போக, முகாமிற்குள் எவரின் ஆதரவுமின்றி அந்த ஊர்க்காரப் பெண் தனித்துவிடும் அவல நிலைக்குப் போகின்றாள்.

சாந்தி இந்தத் துயரங்கள் அனைத்தையும் பார்த்தபடி, அகதி முகாமின் காதுகளால் 'இவள் பலரோடு படுத்தெழும்பவள்' என்ற அவலக் கதைகளையும் கேட்டபடி, தனது பிள்ளைகளின் வாழ்வு தன்னைப் போலவே பல்வேறு திசைகளில் சுழனறபடி இருப்பதைப் பார்த்தபடி தன் 56 வயதில் முகாமிற்குள்ளேயே மரணித்துப் போகின்றாள்.

பத்திநாதனின் 'அந்தரம்' அகதி முகாம் மக்களின் வாழ்க்கையை குறுக்குவெட்டாக பதிவு செய்கின்ற ஓர் ஆவணப்பதிவாகவும் கொள்ளலாம். இப்படி சரி / பிழை, நியாயம் / அநியாமின்றி உள்ளது உள்ளபடி பதிவு செய்ய பத்தினாதனைப் போல அகதி முகாம் அனுபவம் இல்லாத ஒருவரால் ஒருபோதும் சாத்தியமாகாகப் போவதில்லை.

இந்த நூலின் பலவீனமாக முதல் பாகத்தைச் சொல்வேன். அந்தப் பாகத்தில் பத்தினாதன் என்ற மனிதரின் கதையே நமக்குச் சொல்லப்படுகின்றது. அதாவது அவர் இந்தியாவிலிருந்து இலங்கைக்குத் திரும்புகின்ற கதை. கதைசொல்லியாக இல்லாது, இங்கே பத்திநாதன் அதே அடையாளத்துடன் ('இங்கேதான் எனது நூலான 'போரின் மறுபக்கம்' அகதிகள் நூல் வெளிவந்து') எனச் சொல்கிறார். எனவே, இது நாவலா இல்லை ஒருவரின் நினைவுக் குறிப்புகளா என்ற குழப்பம் வருகின்றது (நண்பன் நாவலை எப்போது முடிப்பாய் என்று கேட்கும்போது, 'நீ சொன்ன கதைகளைத்தான் எழுதி முடித்திருக்கின்றேன். இனி இலங்கைக்குப் போகின்ற கதைகளையும் எழுதப் போகின்றேன்' எனச் சொல்லப்படுகின்றது). ஆகவேதான் பத்தினாதனின் 'அந்தரம்' பனுவலை எந்த வகைக்குள் அடக்குவது என்பதில் சற்று சிக்கலுண்டு. ஆனாலும் வடிவங்களை விட சொல்லப்படும் விடயங்கள் இக்காலத்துக்கு முக்கியமானது என்பதால் இந்தச் சிக்கலைச் சற்று தள்ளி வைத்துவிடலாம்.

இதன் இரண்டாம் பாகத்தில் பெண்களைப் பற்றி வருகின்ற கதைகளை இன்னும் ஆழமாக




எழுதியிருக்கலாம். யாரோ சொல்கின்ற கதைகள் என்பதைவிட, அந்தப் பெண்களின் ஆழங்களுக்கு உள்ளே இறங்கிப் பார்த்திருந்தால் இன்னும் வீரியமாக அந்தப் பகுதிகள் விரிந்திருக்கும்.

மேலும் பலரோடு உறவு வைத்திருக்கும் சாந்திதான் இதன் முக்கிய பாத்திரம். அவரின் அல்லல்கள், தத்தளிப்புக்களைவிட அவரின் 'நல்லொழுக்கமற்ற' பெண் பாத்திரமே அதிகம் முனைப்பாகத் தெரிவது மட்டுமில்லை, இந்த நாவலில் வரும் அநேக முகாம் பெண்கள் பிறழ் உறவுகளிலும்யாரோடு ஓடிவிடுபவர்களாகவும்யாரின் வாழ்வைக் குலைப்பவர்களாகவும் பெரும்பாலும் சித்தரிக்கப்படுவதைத் தவிர்த்திருக்கலாம்.

ஆகக் குறைந்தது, இந்தப் புனைவு எழுதப்பட்டு பத்தினாதனாலோ பிறராலோ திருத்தப்படும்போதாவது இப்படித் தொனி வருதல் மாற்றி அமைக்கப்பட்டிருக்கலாம். ஒரு விளிம்புநிலை சமூகத்தின் வாழ்க்கையை முன்வைக்கும்போது, ஏற்கனவே அதிக புரிதலில்லாத பொதுப்புத்திக்கு 'இவர்களை இப்படி வைத்திருப்பதே' சரிதான் என்கின்ற எண்ணம் வரக்கூடிய அபாயமிருக்கின்றது. எனவேதான் அதீத கவனத்துடன் விளிம்பு நிலை யினரின் கதைகளை நாம் கையாள வேண்டி யிருக்கின்றது.

இத்தனைக்கும் அப்பாலும், பத்தினாதனின் 'அந்தரம்' மிக முக்கியமான ஒரு பிரதி என்பதில் மறுபேச்சில்லை. ஏனெனில் தமிழகத்து அகதி வாழ்க்கையை மட்டுமில்லை, அதற்குள் நின்று எழுதுவது கூட இன்றைக்கும் ஒரு அபாயகரமான விடயமாகும். இப்படி அகதியாக இருப்பவர்க்கு ஒன்று நடந்தால் கூட எவரும் வந்து காப்பாற்றி விடப் போவதில்லை. கொஞ்சம் அதிகாரத்துக்கு எதிராக கதைத்தாலே பொய்க்கதைகள் புனைந்து, அதிபயங்கரமானசிறைச்சாலைகளில்கொண்டுபோய் அகதிகளைக் காலம் முழுக்கத் தள்ளிவிடும் அதே மனோநிலையில்தான் இந்திய அதிகார வர்க்கம் இன்னமும் இருக்கின்றது.

இந்த நூலில், மீண்டும் இலங்கை திரும்புகின்ற பத்தினாதனை 25 வருடங்களுக்குப் பிறகு இவ்வளவு அடக்குமுறையுள்ள இலங்கையரசு கூட, அவருக்கு குடியுரிமை கொடுத்து வாக்களிக்கக் கூட விடுகின்றது. ஆனால், அதைவிட தன் வாழ்நாளில் பெரும்பாகத்தை இந்தியாவில் கழித்த ஒருவருக்கு எந்த அடிப்படை உரிமையும் கிடையாது. முகாமை விட்டு வெளியே வந்தால் ஒரு 'தலைமறைவு' வாழ்க்கையைத்தான் எந்த ஈழத்து அகதியும் இந்தியாவுக்குள் வாழ வேண்டி யிருக்கின்றது.

எத்தனையோ ஆண்டுகள் முகாம் வாழ்க்கை வாழ்ந்தபோதும், ஈழத்தில் முள்ளிவாய்க்காலில் படுகொலைகள் நடந்தபோது அகதி முகாம் மக்கள் அத்தனை ஒடுக்குமுறைக்களுக்கு அப்பாலும், உண்ணாவிரதம் இருக்க விரும்புகின்றார்கள். ஆனால், அனுமதி மறுக்கப்பட்டு, அங்கே அனுமதி வாங்கவேண்டும், இங்கே அனுமதி வாங்கவேண்டும் என்று உண்ணாவிரதம் இருக்ககூட சுதந்திரமாக அவர்கள் அனுமதிக்கப்படுவதில்லை. அப்படியிருந்தும் அதை மீறி அவர்கள் ஈழத்து மக்களுக்காய், தம் தோழமை உணர்வைக் காட்டுகின்றார்கள். அப்போது தனது 16 வயதுப் பிள்ளையை போருக்கு அண்மையில் பலிகொடுத்த மேரி என்ற பெண் உரத்துக் குரலெடுத்துக் கதறுகின்றார். அந்தக் கதறலில் முழு அகதி முகாமே நிசப்தத்தில் ஆழ்கிறது.

அதுவே தமிழுணர்வு. அதுவே தமிழ் எழுத்துச் சூழலில் கவனிக்கப்படாத தம் எழுத்துக்களை 'அகதி இலக்கிய' வகைக்குள் வைக்க வேண்டுமென பத்தினாதன் போன்ற அக்தி முகாங்களில் இருந்தவர்கள் முன்வைக்கும்போது, நாம் அதை மறுபேச்சின்றி ஏற்றுக்கொள்ளவே வேண்டும். அதே சமயம் அவர்களைப் போன்றவர்கள் அகதிகள் என்ற அடையாளங்களில் மட்டும் அடங்குபவர்களல்ல; என்றும் எம் நேசத்துக்குரிய சகமனிதர்களே என்று தோழமை உணர்வுடன் தோளணைத்துக்கொள்ளவும் வேண்டும்.

"இளங்கோ" **<elanko@rogers.com>**

# பாலைச் சவாரி

**கன்பரா யோகன்**

ஓவியம்: **ஏ. ரஜினி**

சூப்பர் மார்க்கட் ஒன்றும் வேறு பல கடைகளும் இருந்த அந்த தெருவின் முடிவில்தான் நரேனின் வீடு இருந்தது. வீட்டுக்கு முன்னால் தெருக்கரையில் வாகனங்களை நிறுத்தலாமா இல்லையா என்று சாருவுக்கு தெரியாததால் சிக்னலைப் போட்டுவிட்டு காரின் எஞ்சினை நிறுத்தாமல் இறங்கி அறிவிப்புப் பலகையைத் தேடிப் போக வேண்டியிருந்தது.

வார விடுமுறைகளில் பார்க்கிங் இலவசம் என்று அறிந்துகொண்டபின் குளிரில் விறைத்த கை விரல்களை ஓவர் கோட்டின் பொக்கட்டுக்குள் நுழைத்துக்கொண்டு காரில் ஏறி என்ஜினை நிறுத்தினாள்.

வீட்டுக்கு முன்னால் வெண்ணிற டெய்சிகள் பூத்து நின்ற தோட்டம். இடப்பக்கமாக ட்ரைவ்வே ஓடுகிறது. எல்லா வீடுகளுக்கும் வெளித்தெரியும் அமைதியில் அந்த வீடும் ஆழ்ந்திருந்தது.

இறங்கிப் போக தயக்கமாகவிருந்தது. ஒரு கணம் யோசித்தபின் போட்டோ கிளப்பிலுள்ள மற்றவர்கள் வரும் வரை காரிலேயே இருக்கலாம் என்று சாருவுக்கு தோன்றியது. தலைக்கு மேலிருந்த கண்ணாடியில் முகப்பூச்சு அதிகமாகத் தெரிந்ததால் கைப்பையிலிருந்த வட்டப் பஞ்சினால் துடைத்து சரியாக்கினாள்.



காரின் பின் சீட்டில் ஆங்கிலப் பத்திரிகைகள் தாறுமாறாகக் கிடக்கின்றன. அவற்றில் அவளது நாவல் அறிமுகக் கட்டுரைகள் ஏதாவது இருக்கும்.

சாரு பத்திரிகைத் துறைக்குள் நுழைவதற்கு முன்னரே புகைப்படக்கலையை கற்றுக்கொண்டதால் அந்த ஆர்வம் தணிந்து விடாதிருக்க எண்ணியே இந்த ஃபேஸ்புக் போட்டோ கிளப்பில் சேர்ந்திருந்தாள். நரேன் போன்ற பல அமைச்சூர் புகைப்படப் பிடிப்பாளர்கள், படித்துக் கொண்டிருந்த மாணவர்கள், தொழில் பார்க்கும் நடுத்தர வயதினர் என்று கிளப்பில் இணைந்திருந்த எவரும் முகம் கண்டு பேசியதில்லை. அவ்வப்போது இணையக் கலந்துரையாடலில் கலந்துகொண்டது மட்டும்தான்.

புகைப்படப் பிடிப்பாளர்களுக்கு இடையே நல்ல ஒரு இணைப்பு இருந்தால் மட்டுமே இந்த தொழிலில் வாய்ப்புகளுக்கும் அறிமுகங்களுக்கும் வழி ஏற்படுகிறது. இதன் அவசியத்தை உணர்ந்து கொண்டவர்களே இந்த கிளப்பைத் தொடங்கிய முன்னோடிகள்.

சில மாதங்களுக்கு முன்னர் நரேன்



எடுத்த ஒரு புகைப்படத்திற்கு தனது விருப்பை தெரிவித்து பின்னூட்டம் அனுப்பியதிலிருந்து சாருவுக்கு நரேனுடன் அறிமுகம் ஏற்பட்டது. நிலமெங்கும் ஊதா நிற மலர்கள் பரவியிருந்த ஒரு பாதையின் இரு புறமும் ஜாக்கரண்டா மரக் கூட்டத்தை கொண்ட அந்தப் புகைப்படத்திற்கு அவளிட்ட தலைப்புச் சொற்றொடர் மற்றவர்கள் எழுதியவற்றை விட கவித்துவ கவர்ச்சி கொண்டிருந்தது. புகைப்படங்களுக்குப் பொருத்தமான தலைப்புச் சொற்களை புகைப்படக் குழுவிலுள்ளோர் ஃபேஸ்புக்கில் பரிமாறிக்கொள்வது வழக்கம். அமைச்சூர் படப்பிடிப்பாளர்களுக்கு கலைஞர்களின் பின்னூட்டம் என்பது வளர் பயிரைத் தேடி வரும் நீரோட்டம் போன்றது.

'மரம் பூங்கொத்து. நிலம் கம்பளம். வரவேற்பு யாருக்கு?' என்றசாருவின் வரிகளில் தெரிந்தநுட்பமான அவதானம் நரேனுக்கும் வியப்பாகதானிருந்தது. பலருக்கு பிடித்துமிருந்தது. பத்திரிகைத்துறைக்குள் நுழைவதற்கும் அவளின் எழுத்து ஆர்வமே இழுத்துச் சென்றது. சிறு வயதிலிருந்தே தொடரும் வாசிப்பதில் இருந்த ஆர்வம் அவளுக்கு என்றும் தணிந்ததில்லை. இதனாலேயே அவளுக்கு எழுத்தும் கவர்ச்சியைக் கொடுத்திருந்தது.

தொடர்ந்து காருக்குள் இருப்பது சலிப்பைத் தர தயக்கத்தை உதறிவிட்டு காரிலிருந்து இறங்கிய சாரு அந்த அபார்ட்மெண்ட் கதவுக்கு முன் வந்து நின்றாள். சாரு ஒரு கருப்பு நிற ஜம்பர் அணிந்திருந்தாள். தோள்வரை தொடும் தூரிகையின் மென் மயிர்க்கற்றைகள் போன்ற முடி. அது அடிக்கடி அவள் முகத்தில் வழிந்து கண்ணை மறைக்க அதை நிமிர்த்தும் தலையசைப்பு ஒரு மின்னல் கணத்தில் நிகழ்வது அவளுக்கு இன்னும் கவர்ச்சியைக் கொடுக்கிறது.

கதவுக்கு கிட்ட காதை வைத்துக் சற்று நேரம் கேட்க உள்ளே வயலின் இசைக்கப்படுவது கேட்டது. சுவரிலிருந்த அழைப்பு மணியை அழுத்த கையெடுத்தபோதுதான் சொல்லி வைத்தாற்போல நால்வர்- மூன்று ஆண்களும் ஒரு பெண்ணும் - அவளை நோக்கி கதவடிக்கு வந்தார்கள். ஃபேஸ்புக் போட்டோ கிளப்பிலிருந்த ஒஸ்டின், சசி, அன்ரன், தீபா ஆகியோர் ஏற்கனவே திட்டமிட்டபடி சனிக்கிழமை நாலு மணிக்கு வருவதாக சொல்லியிருந்தவர்கள். அவர்கள் ஒருவரையும் அவள் முன்னர் சந்தித்திருக்கவில்லை. எனவே, கதவுக்கு வெளியில் நின்றே அறிமுகம் நிகழ்ந்தது.

அதற்கிடையில் அவர்களில் யாரோ அழைப்பு மணியை அழுத்தியிருக்க வேண்டும். கதவைத் திறந்த நரேனின் மனைவி ரேஷா அவர்களை உள்ளே வரச் சொல்கிறாள். உள்ளே வரவேற்பறையில் மியூசிக்

ஸ்டான்டை முன்னால் வைத்துக்கொண்டு ஒரு சிறுமி வயலின் வாசித்துக் கொண்டிருந்தாள். உள்ளிருந்து சிறுவனொருவன் கையில் கதை புத்தகமொன்றுடன் ஓடி வந்து, "யார் இவர்கள் மம்மி" என்றான்.

"டடியின் பிரென்ட்ஸ். போட்டோ கிளப்பில் இருக்கிறார்களாம்."

பையன் உள்ளே போக சிறுமி வயலினையும் ஸ்டாண்டையும் எடுத்துக்கொண்டு பின்தொடர்ந்து உள்ளே போகிறாள். வரவேற்பறையில் இரண்டு இடங்களில் சிறிய ஸ்டூல்களில் கண்ணாடிச் சாடிகளில் கிரிசாந்திமம் பூங்கொத்துகள் தென்பட்டன.

"ஐ ஆம் ரேஷா, பிளீஸ் சிற் டவுன்" என்று சொல்லிக்கொண்டே தானும் கவுச்சில் அமர்ந்த ரேஷா முழங்கால்களுக்கு கீழே ஸ்கேர்ட்டை இழுக்க கொண்டாள்.

அவள் கருப்பு நிற ஸ்கேர்ட்டும் வெள்ளை நிற பிளவுசம் ஊடுவித் தெரியும் அந்த பிளவுசுக்குள் ஒரு வெஸ்ட் கூட அணிந்திருந்தாள். அலையலையாக இறங்கிய தலை முடி தோளுக்கு கீழே இறங்கி யிருந்தது. 'இவளுக்கா நான் பெருந்துயரைக் கொடுத்திருக்கிறேன்?'

வந்த ஐவரும் தாம் விரும்பிய கதிரைகளைத் தேடிப் பிடித்து உட்கார கால் நிமிடம் கழிந்தது. பிறகு ஒவ்வொருவரும் பெயர்களைச் சொல்லி தங்களை அறிமுகப்படுத்திக் கொண்டனர்.

தனது பத்திரிகைத்துறை வாழ்வில் இப்படியான பல அனுபவங்களைக் கடந்திருக்கிறாள் சாரு. ஆனால், இன்று தனது பதற்றத்தை கையாளுவதற்கு சிரமப்பட்டுக் கொண்டிருந்தாள். தலைக்குள் ஓடிக்கொண்டிருந்த எண்ணங்கள் அவளை எதுவும் பேச விடாது தடுத்தது.

'ஒருபோதும் சந்திக்காத நரேனுடன் ஆரம்பித்த வெறும் ஃபேஸ்புக் நட்புதான் இது. பக்கத் திலிருப்பவர்களுக்கும் அப்படியே. இதோ அவனின் மனைவி ரேஷா. அவளையும் சந்திப்பது இதுதான் முதல் தடவை. மற்ற நால்வருக்கும் அப்படியே. இது என்ன தொடர்பு? என்ன பிணைப்பு இது? இந்த நட்பின் ஆழம் என்ன?

'ஒரு வேளை நரேன் என்னைப் பற்றி சொல்லி யிருப்பானா? இருக்காது, அப்படியிருந்தால் என்னை அறிமுகப்படுத்தியிருந்தபோது அவளுக்குத் தெரிந்திருக்கும். இந்த விஷயத்தில் பெண்கள் சாமர்த்தியசாலிகள்.'

சில வினாடிகளின் மௌனத்தின் பின் ரேஷா ஆரம்பித்தாள். "ஒரு வாரத்துடன் விடுமுறையை முடித்துக்கொண்டு வருவதாக சொன்ன நரேன் திடீரென்று விடுமுறையை நீடித்துக்கொண்டு ஃபிங்கி ரேசுக்குப் போனது கடைசி நேரத்தில் எடுத்த முடிவு. புகைப்படமும் காட்சிகளுமே அவன் தலைக்குள் எப்போதும் இருந்ததால் மற்ற எதைப் பற்றியும் அவன் கவலைப்பட்டதில்லை. அந்த ரேஸ் படப்பிடிப்பு புதிய அனுபவம் என்று அவன் நினைத்திருக்கக்கூடும்."

அலிஸ் ஸ்பிரிங் பகுதியில் ஒரு வார புகைப்படச் சுற்றுப் பயணமாக சென்ற நரேன் உளூறு மலையையும் அன்சாக் குன்றிலிருந்து சூரிய அஸ்தமனத்தையும் புகைப்படங்களாக எடுத்துக் கொண்டிருந்தபோது, பாடசாலையில் ஆறு மணிவரை வின்டர் கொன்சர்டுக்காக ஒகெஸ்ட்ரா பயிற்சிகளில் இருந்தாள் ரேஷா. அவளுக்கு நகரத்திலுள்ள தனியார் பெண்கள் கல்லூரியில் பியானோ டியூட்டர் வேலை.

ரேஷாவையும் தன்னுடன் அலிஸ் ஸ்பிரிங்கிற்கு வரும்படி கேட்டிருந்தான், நரேன். முன்பு ஒரே ஒரு முறை மட்டும் அவள் புகைப்படச் சுற்றுப் பயணமொன்றில் சென்றிருந்த போதிலும் நீண்ட களைப்பு மிக்க பயணங்களை ரேஷா விரும்பியதில்லை. பாடசாலையில் வின்டர் கொன்செர்ட் கூட இருந்ததால் அவளால் எப்படியும் போயிருக்க முடியாது.

ரேஷா கவுச்சில் சாய்ந்து கொள்கிறாள். ரேஷாவின் முகத்தில் தெரிந்த நிதானம் சாருவுக்கு திகைப்பளித்தது. 'அவள் எப்படி இதை சமாளித்தாள்? அவள் முகத்தில் தெரியும் அமைதி ஒரு பாவனையாக இருக்காது. காற்று மண்டலம் உடல் முழுவதிலும் எப்போதுமே அழுத்திக் கொண்டிருந்தாலும் நாம் எதனையும் உணராமலே இருக்கிறோமல்லவா? அப்படிதான் ரேஷாவும் மன அழுத்தம் எதனையும் உணராது தாங்கிக் கொண்டிருக்கிறாளா?'

நரேன் அந்தப் பயணத்தை நீண்ட நாட்களாக திட்டமிட்டிருந்தது சாருவுக்கும் தெரியும்.

அலிஸ் ஸ்ப்ரிங் விமான நிலையத்தில் இறங்கி அங்கேயே ஒரு ஃபோர் வீல் டிரைவ் வண்டியொன்றை வாடகைக்கு எடுத்துக்கொண்டு மோட்டேலுக்குப் போய் தங்கியிருந்ததால் நினைத்த நேரத்தில் நரேனுக்கு கமராவைத் தூக்கிக்கொண்டு எங்கும் செல்ல முடிந்தது.

புகைப்படத்தில் பதிவாகும் காட்சிக்கும் வெறுங்கண்ணுக்குத் தெரியும் காட்சிக்குமிடையில் வித்தியாசங்களைப் பார்த்து வருவதே ஆர்வமூட்டியது. நன்கு பேசப்பட்டவைகளும் யாரும் அறியாதவைகளுமென்று எல்லா நிலக்காட்சிகளையும் தேடிப் போவதும், பிறகு அஸ்தமனத்தில் அடிவானம் செம்மஞ்சல் படர்ந்து, மாறிக் கருமை படர்ந்து மறையும் வரை நின்ற பின்னரே மோட்டலுக்குத்

திரும்புவது என்றும், அந்தக் குறும்பயணத்தின் ஒவ்வொரு மணித்துளியையும் அவன் வீணாக்க விரும்பவில்லை.

அவுஸ்திரேலியாவின் இதயம் போல தேசத்தின் நடுவில் அந்த நிலம் சிவந்து கிடக்கிறது. செந்நிறத் தோற்றம் கொண்ட உளுரு என்ற அந்த ஒற்றைச் செம்பாறையை பகலில் பார்க்க செம்மண் தரையில் புதைத்து விட்ட பெருத்த செந்நிற யானையின் முதுகைப் போல தெரிகிறது. மைம்மல் பொழுதில் நீல வானத்தின் பின்னணியில் அது அடி வானத்தில் மறைந்து கொண்டிருக்கும் பிரம்மாண்டமான சூரியனின் மேற் கால்வாசித் துண்டு போலவும் தெரிகிறது. அந்த பாறையின் வயதும் அவுஸ்திரேலியாக் கண்டத்தின் வயதும் ஒன்றே என்று சொல்கிறார்கள். மனித சஞ்சாரமற்ற நிலம் முதலில் தோன்றியதற்கு சாட்சியாக அது நிற்கிறது. இரவில் வானம் முழுதும் நிறைந்து கிடக்கும் நட்சத்திரங்களையும் பரந்த வான் வெளியையும் பூமியின் தென்னரைக் கோளத்தில் இங்கிருந்து மட்டும்தான் இவ்வளவு துல்லியமாக காண முடியும்.

வெயில் வறுத்தெடுக்கும் சிவப்புத் தரையில் மழை வரும் பருவம் வந்தால் ஓடும் வெள்ளம், இல்லையென்றால் பறக்கும் புழுதி. வருடத்தில் அடிக்கடி காற்றுக்கிளப்பும் தூசிப் புயல் மரங்களையும் கார்களையும் செம்புழுதிப் படலத்தால் மூடுகிறது.

வரும் வழியில் அவுஸ்திரேலியாவை நெடுக்காக குறுக்கறுத்துச் செல்லும் நெடும் பயண ரயில் செல்லும் நகரத்தில், ஒரு சிறிய மோட்டேலில் தங்கியிருந்த வேளையில்தான், அந்த நகரத்தின் வரலாற்றை அறிந்துகொண்டான். முன்னர் மத்திய அவுஸ்திரேலியாவில் கனிமங்களை தேடிச் சென்ற ஆய்வாளர்களுக்கு அந்த அனல் மணல் பகுதியில் பயணிக்க ஆப்கானியர்களின் ஒட்டகங்களே தோதாகவிருந்தன. ஒட்டகங்கள் கப்பலில் வந்திறங்கின. ஆப்கானிய ஒட்டகங்களை நினைவூட்டும் வகையிலே கான் அந்த பெயரையே ரயிலுக்கும் வைத்திருந்தார்கள்.

நரேனின் ஏழுநாள் பயணத்தின் ஆறாம் நாள் அன்று. அங்கிருந்து அலிஸ் ஸ்பிரிங் சென்றால் பயணம் முடிந்து விமானத்தில் வீடு திரும்ப வேண்டியதுதான். அப்போதுதான் சாரு அவனுக்கு குறுஞ் செய்தியொன்றை அனுப்பியிருந்தாள்.

“தேநீர் அருந்துகிறீர்களா?” என்று ரேஷா கேட்டதற்கு அனைவரும் வேண்டாமென்று தலையசைத்தனர்.

வெளியே கடுங்குளிர் காற்றடித்தபோதிலும் உள்ளே ரேஷாவின் வரவேற்பறையில் ஒரு வெப்பம் பரவியிருந்ததை சாரு உணர்ந்தாள். ஒரு வேளை அறையின் பலகை நிலத்தில் எங்கோ ஒளிந்திருக்கும் வென்ட் வழியாக சூடாக்கியொன்று வெப்பக்காற்றை வெளித்தள்ளிக் கொண்டிருக்கலாம். ரேஷா இப்போது வெளியே கண்ணாடி யன்னலினூடு பார்வையை செலுத்திக் கொண்டிருந்தாள்.

பிறகு மவுனத்தை கலைத்து, “நீங்கள் எல்லாரும் ஃபேஸ்புக் போட்டோ கிளப்பில் இருப்பது கூட எனக்கு தெரியாது. நரேன் சொன்னதில்லை. நான் கூட அவன் ஃபேஸ்புக் படங்களைப் பார்த்ததில்லை. நான் பாடசாலை, மியூசிக் என்று என் பாட்டுக்கு இருந்துவிட்டேன்.” அதில் ஒரு ஆற்றாமை தொனித்தது.

நரேனின் உலகமும் ரேஷாவின் உலகமும் தனித்தனியே இருந்தன. ஒரே வீட்டில் வாழ்ந்தாலும் அவரவர் வேலைப் பளுவும் அதன் மன அழுத்தங்களும் இருவரையும் தனித் தனித் தீவுகள் ஆக்கி விடுகிறது. பிள்ளைகளுடன் செலவிடும் நேரமும் படுக்கையறையில் செலவிடும் நேரமும் தவிர்ந்த ஏனைய பொழுதுகளில் இருவரதும் ஆர்வங்களும் வெவ்வேறு திசையில் இருந்தன. நரேன் முழுநேரமாக வங்கியொன்றில் வேலை செய்துகொண்டு ஆர்வத்தினால் மட்டுமே இந்த புகைப்படக் கலைக்குள் வந்தவன்.

அங்கிருந்த நால்வர் மனதிலும் என்ன ஓடுகிறது என்று சாருவுக்குத் தெரியவில்லை. அவளுக்கே தன் மன ஓட்டம் பிடிபடவில்லை. இடையிடையே சிலர் ரேஷாவுடன் பேசினர். சாரு தனது உலகில் சஞ் சரித்துக் கொண்டிருந்தாள். சாரு தனது கவனம் அவர்களின் உரையாடலிலிருந்து தொலைந்தது தெரியாதிருக்க அவ்வப்போது முகத்தில் பாவனைகள் செய்ய வேண்டியிருந்தது.

கடந்தசிலவாரங்களாக அதிகாலையில் திடுக்கிட்டு விழித்து பிறகு நித்திரை குலைந்து எண்ணங்கள் தாறுமாறாக ஓடத் தொடங்கும். ஒவ்வொரு காலையும் அவநம்பிக்கையிலும் சலிப்பிலும் விடிகிறது. அதிகாலைப் பனிமூட்டத்தை விலக்கும் சூரியன் எழுவது போல சோர்ந்து விழும் அவள் மனதை தூக்கி நிமிர்த்த ஏதாவது எழுந்து வர வேண்டும். ‘இந்த நாளும் இயற்கை மலர்வித்த மலரல்லவா? இதனை முகர்ந்து பார்க்காமலேயே கசக்கி எறிந்துவிடப் போகிறேனா?’ தான் தோன்றித்தனமான கேள்விகள் முளைக்கும். அடுத்த கணமே, ‘இதிலிருந்து விரைவில் விடுபட்டு விடுவாய். மரங்களையும் நீலவானத்தையும் மலை முகடுகளையும் நிமிர்ந்து பார்க்கும் நாட்கள் மீண்டும் வரும்’ என்று மனக்குகையின் ஆழத்திலிருந்து ஒரு அசரீரி அவளுக்கு கேட்கும். இருட்டை ஊடுருவி வரும் தூரத்து ரயிலொன்றின் வெளிச்சம் போல பிறகு நம்பிக்கை தெரிய ஆரம்பிக்கும்.

அது நிகழ்ந்து கிட்டத்தட்ட நான்கு வாரங்களாகி விட்டன

சாரு அனுப்பிய குறுஞ் செய்தியில் அலிஸ் ஸ்பிரிங்கில் வருடாந்தம் நடக்கும் ஃபிங்கி ரேஸ் என்றழைக்கப்படும் டிரக்குகளின் பாலைச் சவாரிக்கு இன்னும் இரண்டு நாட்கள்தான் இருப்பதாகவும் சாகசப் புகைப்படங்கள் எடுப்பதற்கு நல்ல வாய்ப்பு என்றும் எழுதியிருந்தாள். பனிச்சறுக்கு விளையாட்டை அல்லது செங்குத்தாக மலைறுவதை அல்லது படகோட்டும் பந்தயங்களை சாகசப் புகைப்படங்களாக வெளியிடுவதற்கு பத்திரிகைகள் போட்டி போடும். அதுவும் இப்படியான பாலைவன வண்டிச் சவாரிகளுக்கும் பெரும் வரவேற்பு இருந்தது. சாருவுக்கு அதில் கொஞ்ச ஆதாயமும் இருந்தது. தனது பத்திரிகை செய்திகளுக்கு நரேனின் புகைப்படங்கள் கிடைக்குமே!

சாருவின் குறுஞ்செய்தியைப் பார்த்துவிட்டே நரேன் பயணத்தை இரண்டு நாட்கள் பின் போட்டு விமானச் சீட்டுகளை திரும்ப எடுத்தான். ஃபிங்கி ரேஸுக்குப் போவதையும் இரண்டு நாட்கள் பிந்தி வருவதையும் ரேஷாவுக்கு குறுஞ் செய்தியில் அனுப்பினான். ரேஷாவிடம் சொல்லாமலே எடுத்த முடிவுதான். ஆனால், அவன் மனதுக்குள் அடிக்கடி மெல்லிய அதிர்வு. செந்நிலத்தின் பின்னணியில் ஏற்கனவே எடுத்திருந்த புகைப்படக் காட்சிகளுக்கு சாரு சொற்களால் என்ன தலைப்பிடுவாள்? வீடு திரும்பியதும் அவற்றுள் மிகச் சிறந்தவைகளையே அவளுக்கு அனுப்ப வேண்டும். முன்னர் அன்சாக் மலையிலிருந்து அவன் எடுத்த சூரிய அஸ்தமன புகைப்படத்தைப் பார்த்து விட்டு, 'வர்ணங்களால் கவிதை எழுதுகிறது வானம்' என்று சாரு அதற்குத் தலைப்பிட்டு திருப்பி அனுப்பியிருந்ததும் நரேனுக்குப் பிடித்திருந்தது. அவனுக்கு கிடைத்த பிரியமான ரசிகை என்று அவளை நினைத்துக்கொள்வது நரேனுக்கு இரகசிய உவகை தந்திருக்க வேண்டும்.

ஃபிங்கி ரேஸ் என்பது இருநூற்றி முப்பது கிலோமீற்றர் வரையில் அந்த செந்நிலப் பாதையில் டிரக்குகள் ஓடித் திரும்பி வர வேண்டிய சவாரி. மொத்தம் நானூற்று அறுபது கிலோ மீற்றர். தெருவில் ஓட அனுமதிக்காத இந்த வகையான ட்ரோபி அல்லது பக்கி டிரக்குகளின் சில்லுகளும் என்ஜின் வலுவும் எந்த கரடுமுரடான பாதைக்கும், பாலை நிலங்களில் சிவப்பு மணல் கும்பிகள் கொண்ட பாதைச் சவாரிக்கும் ஏற்றதாக, ஒவ்வொரு சில்லுக்கும் பெரிய சஸ்பென்சன் ஸ்ப்ரிங் பூட்டப்பட்டிருந்தன.

அந்த பாதை அவுஸ்திரேலியாவின் மத்திய பிரதேசத்தின் பெரும்பகுதியை ஆக்கிரமித்திருக்கும் சிம்சன் பாலை நிலத்துக்கு சமாந்தரமாகவே செல்கிறது. பாதையின் பெரும் பகுதி வெறும் அவாந்தர வெளியாக இருக்கும். பாதையில் ஆங்காங்கே வாட்டில் மரங்கள், ஈமுயு பற்றைகள் அல்லது பாறைக் கற்கள் தென்படுகிம். பாதை ஃபிங்கி என்ற இடம் வரையும் செல்வதால் இந்த வண்டிகளின் சவாரிப் போட்டிக்கும் ஃபிங்கி ரேஸ் என்றே நெடுங்காலமாக அழைக்கப்பட்டு வந்தது. தெற்கு அவுஸ்திரேலிய எல்லைக்கு சமீபமாயுள்ள ஃபிங்கி என்ற இந்த நகரத்தில் சனத்தொகை இருநூறு பேருக்கு கிட்டதான். பெரும்பாலும் அவுஸ்திரேலிய அபோரிஜினிகளாகிய அறன்ரே என்ற பூர்வீக குடிமக்களின் நிலம்.

அலிஸ் ஸ்ப்ரிங்கிலிருந்து நாற்பது கிலோ மீட்டர் தூரத்திலிருந்த அவன் படம் பிடிக்கச் சென்ற இடத்தையடைய நேரம் எட்டரையாகிவிட்டது. எட்டு மணிக்கு அலிஸ் ஸ்பிரிங்கில் தொடங்கும் சவாரியில் வரும் வண்டிகள் இந்த இடத்திற்கு வர அரை மணி நேரம் பிடிக்கும். சவாரி தொடங்கும் இடத்திற்கு போன் பண்ணிக் கேட்டு விபரங்களை அறிந்துகொண்டே அங்கே சென்றிருந்தான்.

பல ரகமான டிரக்குகள், மோட்டார் சைக்கிள்களின் சவாரிகள் என்று இரண்டு நாட்கள் தொடர்ந்து நடைபெறும் போட்டிகளைக் காண, ஓரிரு நாட்களுக்கு முன்னரே வந்து, சவாரிப் பாதையின் அருகேயுள்ள பற்றைகளுக்குள் பல குடும்பங்கள் காம்ப் அடித்திருந்தனர்.

கமராவின் முக்காலி நிறுத்தியை பக்கத் திலிருந்த பற்றையொன்றின் அருகில் வைத்துவிட்டு கமராவையும் எடுத்துக்கொண்டு மணல் திட்டி மேல் ஏறி நின்ற கூட்டத்துடன் சேர்ந்துகொள்ள ஏறிப்போனான்.

அங்கிருந்து பார்த்தால் ஒரு கிலோ மீற்றர் வரையிலான சவாரிப் பாதை ஓரளவுக்குத் தெரியும். செம்மணல் கும்பிகளும் பள்ளங்களும் கொண்ட இப்படியான பாதையையே பெரிதும் விரும்பும் படப் பிடிப்பாளர்கள் நகரத்திலிருந்து பெருந்தொலைவு தூரம் புழுதிப் பாதைகளினூடு வந்து காத்திருப்பதற்கு ஒரு காரணம் இருந்தது. மணல் கும்பிகளின் உச்சியை நோக்கிச் சீறிப் பாய்ந்து வரும் டிரக்குகள் வந்த வேகத்துடன் காற்றில் பறக்கும் சில கணங்களைப் புகைப்படத்தில் அல்லது வீடியோவில் பதிவாக்கும் கிறுக்குத்தனமான ஆர்வமே அது.

சிவப்புச் சேற்று வெள்ளத்தை வாரி விசிறுவது போல செம்மண்ணை இரு புறமும் வண்டிகள் விசிறிக்கொண்டு பக்கி டிரக்கொன்று தூரத்தில் வருவது தெரிகிறது. அவற்றின் உயர்ந்த சில்லுகளையும் அதன் மேலுள்ள சிறிய சாரதிப் பீடத்தையும் பார்த்தால் அவை வேகமாக ஓடும் சிலந்தியின் பரிமாணத்தை ஒத்திருந்தன.

ஒவ்வொரு டிரக்குகளுக்கும் இடையில் பெரிய நேர இடைவெளி இருந்தது. ஆரம்பிக்கும் இடத்திலே ஒவ்வொரு வண்டிக்கும் சில செக்கன்கள் இடைவெளி விட்டே புறப்பட அனுமதிக்கிறார்கள். அதை விட குறுகிய அந்த மண் பாதையில் ஒன்றையொன்று ஓவர்டேக் பண்ணுவது கூட சுலபமல்ல. முன் செல்லும் வண்டியின் புழுதிப் புகை வேறு பின்னால் வரும்



வண்டியோட்டியின் பார்வையை மறைப்பதையும் தவிர்க்கமுடியாது.

ஒருகணம் ரேஷாவின் நினைவுவர அவளுக்கு போனில் பேசி இந்த போட்டியைப் பற்றி சொல்லவேண்டுமென்று தோன்றியது. வேண்டாம் இப்போது அவள் மியூசிக் கான்செர்ட்டில் ஒரே பிஸியாகவிருப்பாள். பிறகு சாருவுக்கு குறுஞ்செய்தி அனுப்ப எண்ணினான். வேண்டாம் படங்களை எடுத்து அனுப்பி பிரமிக்க வைக்கலாம்.

மீண்டும் சனக்கூட்டம் ஆரவாரிக்கத் தொடங்குகிறது. இப்போது இன்னொரு நீல நிற ட்ரோபியொன்று அடுத்து வருகிறது. மணல் திட்டின் உச்சி வரை வந்து புழுதியை பின்னே தள்ளி ஒரு ரொக்கட்டைப் போல பறக்கப் போகும் அதைப் படம் பிடிப்பதற்காக நரேன் மணல் திட்டிலிருந்து கீழிறங்கி கமரா முக்காலியை நோக்கி வருகிறான்.

ட்ரோபி மேலேறி வருகிறது. அது மண் கும்பியில் வேகமாக சீறிப் பாய்ந்து ஏறியதில் மேலே வானை நோக்கி ஓரிரு மீற்றர்கள் எம்பிப் பறந்து பின் மீண்டும் மணல் திட்டின் இறக்கத்தில் விழுந்தது.

இப்படி மண்ணை உதைத்து விழுந்தால் அந்த அதிர்ச்சியில் ஸ்டீயரிங் வீல் டிரைவரின் கையை விட்டு உதறிச் சுழல்வதைத் தடுப்பது கடினம். அனுபசாலிகள் மட்டுமே ஸ்டியரிங்கை சாதுரியமாக பிடித்து பாதைக்கு கொண்டு வருவர். துரதிஷ்டவசமாக அன்று அது விழுந்த கணத்திலேயே நரேன் நின்ற பக்கமாகத் திசை மாறித் திரும்புகிறது. கூட்டத்தில் பக்கத்தில் நின்ற சிலர் பாய்ந்து தப்புகின்றனர். ஆனால், கமராவில் குறியாகவிருந்த நரேன் இதை எதிர்பார்க்கவில்லை. ட்ரோபி கணப்பொழுதில் நேரே நரேனை நோக்கி வந்து அவனை புழுதிப் புகைக்குள் அமிழ்த்துகிறது. பிறகு அது அவனை மோதி விழுத்தியது. சிவந்த மணலில் கோடிழுத்தபடியே, தனது நான்கு சில்லுகளுக்கிடையே பருந்து கோழிக் குஞ்சொன்றை கால்களுக்கிடையில் நிலத்தில் அரைய

பிடித்திழுத்துச் செல்வது போல இழுத்துச் சென்றது. நரேனின் கையிலிருந்த கமரா செம்மணலுக்குள் புதைந்தது.

இவ்வளவும் நிகழ்ந்தது சில செக்கன்களுக்குள்தான். காயப்பட்ட சிலர் அவசர மருத்துவ ஹெலிஹொப்டர் மூலம் அலிஸ் ஸ்பிரிங் வைத்தியசாலைக்கு கொண்டு செல்லப்பட்டனர். நரேனின் செம்மண் புழுதி போர்த்திய உடல் ஆம்புலன்சில் ஏற்றப்பட்டது.

அந்த நீல நிற ட்ரோபியை ஓட்டி வந்த சாரதி ஐம்பது வயது மதிக்கத்தக்க ஒரு பெண். அவளுக்கு கால் எலும்பு உடைந்தது. தலையிலும் காயம் ஏற்பட்டபோதிலும் அவள் உடனடி சிகிச்சையின் பின்னர் தப்பினாள்.

விபத்தின் முழு விபரங்களையும் சாரு பலமுறை பத்திரிகை செய்திகளிலும் தொலைக்காட்சியிலும் பார்த்துவிட்டாள். அருகில் நின்றவர்களுடன் கடைசியாக நரேன் பேசியதைக் கூட கேட்டு பேட்டி எடுத்து செய்திக் குறிப்புகள் போட்டிருந்தார்கள்.

‘என்னுடைய தகவலில்தான் ஃபிங்கி ரேஸுக்கு வந்தது பற்றி நரேன் விபத்துக்கு முன்னர் அங்கிருந்த யாரிடமும் ஒரு சொல்கூட சொல்லவிலை. ஒருவேளை அவன் ரேஷாடம் சொல்லியிருப்பானா என்பதையும் தெரியாமலே இங்கே என்னால் எப்படித் துணிந்து வர முடிந்தது? ரேஷாவை ஒருமுறை பார்த்து விட வேண்டுமென்ற உந்துதலினாலா? ரேஷாவுக்கு உண்மையில் ஆறுதல் கூறத் தகுதி கொண்டவளா நான்? ஒருவேளை நான் யார் என்று ரேஷா அறிந்திருந்தால் ரேஷா என்னை எப்படி எதிர் கொண்டிருப்பாள்?’

சாருவின் சிந்தனை இழைகள் திரண்டு பம்பரக் கயிறு போல அவளை சுற்றிச் சுழற்றுகின்றன. நுனிக்காலில் நின்று சுழன்றாடும் பாலே நடனச் சிறுமியின் நிலையில் மனம் சுழலுகிறது. அது மயங்கி விழும் வரையில் அவளை சுழற்றுவது போன்ற உணர்வு வருகிறது.

நரேன் புகைப்படத்துறையில் ஒரு அமைச்சூர் என்றாலும் அவளுக்குத் தெரிந்த பல ப்ரோபெசனல் படப்பிடிப்பாளர்களின் தரத்துக்கு அவனது புகைப்படங்கள் இருந்தன. சாருவின் ஒரு சொல், ஒரு வரி பாராட்டு தரும் உத்வேகம் நரேனுக்கு பல்லாயிரம் உற்சாகக் கரவொலிகளுக்குச் சமன். புகழும் பாராட்டுக்களும் தரும் ஒரு வகையான போதை அது. அதில் விழுந்தவர்களை அது சிறைப் பிடிக்கிறது. ஆணும் பெண்ணும் இதில் சேர்ந்து வீழ்ந்தால் அது கனவுச் சிறையாகிறது.

அது அவர்களை அறியாமலே மெல்ல இறுகக் கட்டுகிறதா? யாருமறியாத மௌனச் சிறைக்குள் தள்ளி வெளித்தெரியாப் பிணைப்பை இடுகிறது. அதிலிருந்து உதறித் தள்ளி எழுந்து ஓடிவிடலாம்தான். அந்தச் சங்கிலியை அறுத்து விடலாம்தான். அதை யார் செய்வது என்ற இழுபறியிலேயே சுகமாக காலம் கடந்து விடுகிறது.

ஐந்து மணிக்கு மேல் ஆகியிருக்கும். இனி அங்கிருந்து புறப்பட வேண்டியதுதான். துயர் பகிர வீட்டுக்கு வந்து விடை பெற்றுச் செல்லும் முன்பு இப்படியான சந்தர்ப்பங்களில் நீண்ட மவுனம் மழைமேகம் கவிழ்ந்திருப்பதை போல மூடியிருக்கும். பிறகு ஒவ்வொருவர் மனதிலும் அடித்து ஓயும் எண்ணங்களின் பெரு மழை ஆறாகப் பெருக்கெடுத்து அவரவரை இழுத்துச் செல்லும்.

அதன் பிறகே திடீரென்று யாரோ ஒருவரின் எண்ண சிதறல்கள் மழைக்குப் பின் தாழ்வாரத்தில் சொட்டும் ஓரிரு துளிகளைப் போல சொற்களாக வந்து வீழும். அது மௌனத்தைக் கிழித்து கனத்த அதிர்வுகளைக் கொடுக்கும். அதை யார் இப்போது செய்யப் போகிறார்கள். நிச்சயமாக அவளால் முடியாது.

ஆனால், யாரும் எதிர்பாராதவாறு திடீரென்று மௌனத்திரையைக்கிழித்துக்கொண்டு,“நான் அன்றே அந்தப் பெண்ணை மன்னித்து விட்டேன்” என்றாள் ரேஷா.

ஒரு கணம் யாவரும் திடுக்கிட்டனர். சாரு தலையை நிலத்திலிருந்து உயர்த்தவேயில்லை. அவள் கழுத்தெல்லாம் வியர்க்கத் தொடங்கியது.

‘முதலில் நிகழ்ந்த உரையாடல்களுக்கிடையில் இதுதான் எனது தருணம்’ என்று தான் சொல்லவேண்டியதைசொல்லாமல்வாய்க்குப்பூட்டுப் போட்டதையும்,வரும்போதே உருபோட்டுக்கொண்டு வந்ததையெல்லாம் சொல்லாமல் மறைத்ததையும் நினைத்து வெட்கி மனதுக்குள் மவுனமாக அழுதாள்.

சாருயின் கழுத்தினூடாக வியர்வை ஜம்பருக்கு உள்ளே அணிந்திருந்த பிளவுசின் உட்புறமாக செங்குத்தாக இறங்கி கீழ் முதுகுத்தண்டுக்கு போகிறது.

“முன் அனுபவம் போதாத அந்த டிரக் சாரதிப் பெண்ணை நான் மனதார மன்னித்துவிட்டேன். அவள் அறிந்து செய்த தவறு இல்லையே. இந்த அவலமான நிகழ்விலிருந்து அவளும் விடுபட வேண்டும்” என்றாள் ரேஷா.

கன்பரா யோகன்
<solomonyoganantham@gmail.com>

# ஏடாகூடக் கவிதைகள்

செவல்குளம் செல்வராசு



## 1.

வெற்றிலைச் சிவப்பைப்
பார்க்கச் சொல்லி
வேலாய்க் கூரிய நாக்கை
வெளி நீட்டிக் காட்டுகிறான்
சிலிர்க்கிறது உள்ளுக்குள்

## 2.

எக்கணத்திலும்
வாசல் நுழையக்கூடும்
விளையாடப் போன சின்னவன்
பாதி உரித்த பழங்களை
மூடிக்கூட வைக்கவிடாமல்
என்ன அவசரம் இந்த மனுசனுக்கு

## 3.

இதழ் திறக்க மறுத்து
ஆழ் உறக்கத்தில் விழுகிறது சிசு
சுரப்பில் விம்மிய காதலுடன்
கண் நோக்கி முறுவலிக்கிறாள்

## 4.

ஐந்து நாட்களுக்குப் பின்
கூரையை தாண்டி
வெம்மை இறங்கிய
நற்பகலில் சூழல் அமைந்தது
அமைதிப்படுத்த மறந்த கைபேசி
ஒலித்துக் கெடுத்தது

## 5.

சுரோணிதக் கனவுகளில்
பிசுபிசுக்கத் துவங்குகையில்
நாசியேறித் தொல்லை செய்கிறது
நன்கு பழகிய
முதுகுவலித் தைலத்தின் நெடி

## 6.

மனப் பிறழ்விலிருந்து
மீள முயல்கிறேன்
மனம் பிறழ்வையே விரும்புகிறது
மதுரக் கோப்பைக்குள்விரும்பி விழுந்த
சிற்றெறும்பாய் நானும்
மலகோப்பைக்குள்
தவறி விழுந்த
பல்லியாய் அவளும்

## 7.

அவசர அவசரமாய்
உடை திருத்தி
வெளிவருகையில்
திடுக்கிடச் செய்தது
பயந்து ஓடிய
திருட்டுப் பூனை .

## 8.

தொட்டில் குழந்தை
உதையத் துவங்கிவிட்டது
சீக்கிரம்...

9.

புலவி நீட்டம் தணிக்க
நல்ல தேர்வு
நாலாம் புலனே

## 10.

ஏலாத கோபத்தில்
நான்கு கெட்டவார்த்தைகளை
காற்றில் துப்பிவிட்டு
விரக்தியில் வெளியேறுகிறான்
கைதட்டியழைத்த மோகினி
பச்சாபத்தோடு சொல்கிறாள்
“யோவ் நாளைக்கு வாய்யா”

## 11.

யாரும் கவனியாத உயரதிலிருந்தபடியே
தற்செயலாய் பார்க்கிறேன்
வேலை மும்முரத்தில்
விலகிக் கிடக்கும் மேலாடையை
பொருட்படுத்தாமலிருக்கிறாள்
மனதினுள் சண்டையிடத் துவங்கிவிட்டன
இரண்டு ஓநாய்கள்

செவல்குளம் செல்வராசு
<sevalkulamselvarasu@gmail.com>

# பேரம்

ச. சுரேஷ்

பொதுவாக உலகில் நான்கு பருவ காலங்கள். கோடைக் காலம், இலையுதிர் காலம், குளிர் காலம், வசந்த காலம். உலகின் பல்வேறு இடங்களில் இது ஆணித்தரமான உண்மையாக இருந்தாலும்,என்னைப் பொறுத்தவரை சென்னையில் இருப்பது ஒரே பருவ காலம், வெயில் காலம். சற்று கவனமாக யோசித்தால் அதை மூன்று வகையாகப் பிரிக்க முடியும் - சாதாரண வெயில் காலம், கடுமையான வெயில் காலம், மிகவும் கடுமையான வெயில் காலம்.

நான் சென்னைவாசி அல்ல. ஆனால், அடிக்கடி அங்கே வந்து செல்வேன். அப்பொழுது நிலவும் வெயில் காலத்தைப் பொறுத்து காலை உடல் பயிற்சியை ஏழு அல்லது எட்டு மணிக்குள் முடித்து விடுவது உத்தமம் என்பதை உணர்ந்த ஞானி நான்.

பூமத்திய ரேகையின் வடக்கே, சிறிது நாட்களுக்கு முன்பு வசந்த காலம் மலர்ந்திருந்த அந்த மார்ச் கடைசி வாரத்தில் சென்னையில் சற்று கடுமையாக வெயில் அடிக்கத் தொடங்கியிருந்தது. நான் காலையில் தவறாமல் செய்யும் ஒரு மணி நேர நடைப்பயிற்சியை முடித்துவிட்டு சுமார் ஏழரை மணி போல் வீட்டுக்குத் திரும்பிக் கொண்டிருந்தேன்.

பனகல் பூங்காவின் முன் கற்றாழை ஜூஸை தினம் பருகுவதால் வரும் நற்பயனை நம்பி, நடைப்ப யிற்சி முடிந்த கையோடு, வியர்வையுடன், அங்கே கை வண்டியில் விற்பனை செய்து கொண்டிருக்கும் மனிதனிடமிருந்து கப் ஒன்றுக்கு ரூ. 30/- கொடுத்து மூன்று பேர் கற்றாழை ஜூஸ் அருந்திக் கொண்டிருந்தார்கள்.



நிஜார்... வேண்டாம், இதைப் படிக்க நேர்ந்தால் அவனுக்கு நிச்சயம் கோபம் வரும். ஷார்ட்ஸ், டீ-ஷர்ட் அணிந்த கட்டுமஸ்தான உடலமைப்புடைய இருபது, இருபத்திரண்டு வயதுப் பையன் ஒருவன். வேஷ்டி, முழுக்கைச் சட்டை, மஃப்ளர் அணிந்த, லேசான தொந்தியுடன் அறுபது வயது மாமா ஒருவர். சல்வார் கமீஸ், சால்வை, பாட்டா செருப்புடன் குள்ளமான, சற்றே பருமனான மாமி ஒருவர். செருப்புடன் சாக்ஸும் அணிந்திருந்தார் அவர். கட்டை விரலைத் தனியாக நுழைக்க வசதியாக தைக்கப்பட்ட சாக்ஸ் மேற்கத்திய காலணி அணியும் நடப்பு வழக்கில் நாம் செய்துள்ள முன்னேற்றம்.

மாமாவின் நெற்றியில் வியர்வையினால் பாதிக்கப்படாத பளிச்சென்ற நாமம். மாமியின் நெற்றியில் ரத்த நிறக் கலரில் வட்டமான பொட்டு. அந்த மாமா, மாமி நிச்சயம் தம்பதிகள் என்று அவர்கள் பேசிக்கொண்டிருக்கும் விதத்திலிருந்து தெரிந்தது.

"ஏன்பா, போன வாரங்கூட இருபது ரூபாதான் வாங்கிண்டு இருந்தே... இப்ப முப்பது கேக்கறியே? இது நியாயமா?"

"விலைவாசிம்மா... பெட்ரோல் என்ன விலை விக்குது? காய்கறி, பால், அரிசி, பருப்பு... எல்லாம் விலை ஏறிப்போய் கிடக்கு. நானும் ரெண்டு காசு பண்ண வேணாமா?"

தாடி, மீசையுடன், ஆஜானுபாகுவாக இருந்த கடைக்காரன், கரகரத்த குரலில் கற்றாழை ஜூஸின் விலை உயர்வைப் பற்றி குறை கூறிய மாமிக்கு பதிலளித்தான்.

அவனுக்கு உதவி செய்தவாறு கற்றாழை செடிகளிலிருந்து சதைப் பற்றுள்ள இலைகளை நறுக்கி, தண்ணீரில் கழுவி, அவனுடைய வண்டியின் கீழே வைத்துக் கொண்டிருந்தாள் ஒரு பெண். அந்தப் பெண்ணுக்கு முப்பது, முப்பத்தைந்து வயது இருக்கலாம். அவளுடைய நெற்றியில் பொட்டு இல்லை. சில மாதங்களுக்கு முன் தலைமுடியை முழுவதும் மழித்ததன் அறிகுறியாக ஒன்றிரண்டு இன்ச் மட்டுமே வளர்ந்திருந்தது அவளுடைய தலை



முடி. ஜூஸ் அருந்திக் கொண்டிருந்த மாமியே குள்ளமானவர்; இந்தப் பெண் அந்த மாமியை விட மேலும் குள்ளமாக இருந்தாள்.

ஜூஸ் வண்டிக்கு அருகே மற்றொரு கை வண்டி இருந்தது. அந்த வண்டியில் இன்னவென்று வகைப்படுத்த முடியாத சாமான்கள் பல இருந்தன. மரத்தால் செதுக்கப்பட்ட கடவுள் சிலைகள்; கருங்கல்லால் செய்யப்பட்ட இரண்டு மூன்று சாமான்கள்; பிளாஸ்டிக் சாமான்கள் சில; குழந்தை விளையாட்டுசாமான்கள்சில;இப்படிஇன்னவென்று வகைப்படுத்த முடியாத சாமான்களின் கலவை.

அந்த வண்டியிலிருந்த சாமான்களில் என்னைக் கவர்ந்தது கருங்கல்லால் செய்யப்பட்டிருந்த மார்ட்டர் பெஸ்ட்ல். ஏலக்காய், மிளகு முதலியவற்றை பொடி செய்யக்கூடிய சிறிய ஆட்டுக்கல். கருங்கல்லால் செய்யப்பட்டிருந்த ஆட்டுக்கல்லின் வேலைப்பாட்டினால் ஈர்க்கப்பட்டு அந்த வண்டியின் முன்னால் நின்றேன். வண்டியிலிருந்த ஐந்தாறு ஆட்டுக் கல்களிலிருந்து ஒன்றைக் கையில் எடுத்துப் பார்த்தேன். கனமாக இருந்தது. மூன்று கிலோ அல்லது அதற்கு மேலேயே இருக்கும் என்று தோன்றியது. இதைப் பார்த்தால் நிச்சயம் என்னுடைய மனைவி சந்தோஷப்படுவாள் என்று எனக்குத் தெரியும்.

ஆனால், இவ்வளவு எடையுள்ள சாமானை எப்படி எடுத்துக்கொண்டு செல்வது? அதுவும் விமானத்தில்? கையுடன் எடுத்துச் செல்லும் கேபின் பையில் இதை எடுத்துச் செல்வது இயலாது. செக்-இன் செய்யும் பையில்தான் வைக்க வேண்டும். உடையாமல் வந்து சேருமா? மூன்று, நான்கு கிலோ கருங்கல்லை என்னுடைய ரிகார்டோ செக்-இன் பைதான் தாங்குமா?

கற்றாழை இலைகளை கழுவி, சுத்தம் செய்துகொண்டிருந்த பெண் தன்னுடைய ஈரமான கைகளை ஒரு துணியில் துடைத்துக்கொண்டே கை வண்டியின் அருகே வந்து நின்றாள். அந்தப் பெண் நின்ற தோரணையில் அவள்தான் இந்தக் கை வண்டியின் சொந்தக்காரி என்று தெரிந்தது.

"நல்ல கருங்கல் சார். அல்ட்ரா கிரைண்டர் எல்லா... செய்யற அதே கருங்கல் சார்."

அல்ட்ரா கிரைண்டர் செய்யும் அதே கருங்கல்லா?

நடை பாதையில் சாமான்களை விற்பனை செய்வதற்குப் பல உத்திகள் கையாளப்படும். இந்தப் புதிய உத்தியின் மார்க்கெட்டிங் நுணுக்கத்தை மெச்சியவாறு என் முகத்தில் ஒரு புன்னகை அரும்பியது. என்னுடைய புன்னகையின் காரணத்தைப் புரிந்துகொண்டாளோ இல்லையோ, அந்தப் பெண்ணும் என்னைப் பார்த்து சிரித்தாள்.

ஒரு சிலர் புன்னகை செய்யும் சமயம் அவர்களுடைய பற்களைப் பார்க்க முடியாது. ஒரு சிலருக்கு அவர்களுடைய பற்கள் தெரியாமல் சிரிக்க முடியாது. நான் முன் வர்க்கத்தைச் சேர்ந்தவன். அந்தப் பெண் பின் வர்க்கத்தைச் சேர்ந்தவள்.

"நெசமா சார்."

அப்போது கற்றாழை ஜூஸை குடித்து முடித்த மஃப்ளர் மாமாவும் குள்ள மாமியும் தட்டு முட்டு சாமான்கள் நிறைந்த கைவண்டியின் முன் நின்றுகொண்டிருந்த எனக்கு அருகே வந்து சேர்ந்துகொண்டார்கள். என் கையிலுள்ள ஆட்டுக் கல்லைப் பார்த்த இருவரும் மற்றொன்றை எடுத்து ஆராயத் தொடங்கினார்கள். வேறு ஒருவர் வாங்கும் அதே சாமானை தனக்கும் வேண்டுமென்று தோன்றுவது மனித சைக்காலஜியின் பல வினோதங்களில் ஒன்று.

ஒரு கணம் என்னைப் பார்த்து சிரித்துவிட்டு, உடனே அந்தத் தம்பதிகளை நோக்கித் திரும்பி என்னிடம் கூறிய அதே வாக்கியத்தை அவர்களிடம் சொன்னாள் அந்தப் பெண். "நல்ல கருங்கல் அம்மா. அல்ட்ரா கிரைண்டர் எல்லா... செய்யற அதே கருங்கல்."

தள்ளுவண்டி வியாபாரியானாலும் ஒரே சமயத்தில் இரண்டு வாடிக்கையாளர்களை சமாளிக்கும் விற்பனைத் திறனுள்ள அந்தப் பெண்ணின் திறமை எனக்கு வியப்பளித்தது.

"அல்ட்ரா கிரைண்டரா? யாருக்கு காது குத்தற?"

"அய்யே... நெசந்தாம்மா. நம்ப சாராண்ட கூட அதெத்தான் சொல்லிட்டு இருந்தேன்."

என்னையும் அவளுடைய விற்பனைத் திட்டத்தில் சீராக நுழைத்ததை கவனித்தாலும் நான் என் கையிலிருந்த ஆட்டுக்கல்லை வைத்துவிட்டு நகர எத்தனித்தேன்.

"என்ன சார்? விலை கூட கேக்காம போறீங்க?"

"அதில்லம்மா. மூணு, நாலு கிலோ இருக்கும்னு நினைக்கிறேன். இதை எப்படி பேக் பண்ணி எடுத்துட்டு போறதுன்னு தெரியலை. அதான்..."

அவள் கையை விமானம் போவதைப் போல அபிநயம் செய்துகொண்டே கேட்டாள், "பிளேன்லயா போப்போறீங்க?"

அவளுடைய செய்கை, கூர்மையான சிந்தனை, அவற்றை எளிமையாக அவள் வெளிப்படுத்திய லாவகம் என்னை மீண்டும் நிற்க வைத்தது.

"ஒண்ணும் கவலைப்படாதீங்க. ஒரு சின்ன அட்டப் பெட்டில நியூஸ் பேப்பரால சுத்தி டைட்டா பேக் பண்ணிட்டிங்கன்னா கரெக்ட்டா வந்துரும். காரண்டீ."

எங்கள் பேச்சை கேட்டுக் கொண்டிருந்தாலும் அதை கவனிக்காதது போல் குள்ள மாமி கேட்டாள்: "என்ன விலை சொல்லற?"

என்னிடம் கண்களாலே 'ஒரு நிமிடம்' என்று சொல்லிக்கொண்டே அந்தத் தம்பதியிடம் திரும்பினாள். "கடைல எல்லாம் நூத்தெம்பது, இருநூறுன்னு விக்கறாங்கம்மா. நீங்க தான் இன்னைக்கு போணி. நூத்தி அறுவது ரூபா தாங்க, போதும்."

"அடேயப்பா, என்னம்மா இந்த விலை சொல்லறே?"

"அசல் அல்ட்ரா கிரைண்டர் கருங்கல்லும்மா இது. எங்கயும் கிடைக்காது. நான் நியாயமாத்தான் கேக்கறேன்."

"நூறு ரூபாய்க்கு தரையா?"

நூறு ரூபாயா? எனக்கே கோபம் வந்தது.

ஆனால், அந்தப் பெண் சிறிதும் கவலைப்படாமல் பேரத்தைத் தொடர்ந்தாள்.

"நீங்க வசதியானவங்க. இந்த மாதிரி கேக்கறது நியாயமேயில்லை. நூறு ரூவாயில போட்ட மொதல் கூட திரும்பாதும்மா. நூத்தி அம்பத்தி அஞ்சு தாங்க."

மஃப்ளர் மாமா கோதாவில் இறங்கினார்.

"உனக்கும் இல்லை, எனக்கும் இல்லை, நூத்தி முப்பது. ஒரே விலை. வருமா?"

மாமி அவரைக் கடிந்துகொண்டாள்: "என்னது இப்படி தாராளமா விலையை ஒசத்தரேள்? ரொம்ப ஜாஸ்தின்னா..."

"சாமி, கட்டுபடியாவாது, சாமி. அம்மா

மகாலட்சுமி மாதிரி இருக்காங்க. அவங்களுக்காக கடேசி விலை. நூத்தி அம்பது. அதுக்கு கீள முடியாது சாமி."

"பளிங்குல ரங்கன் வாங்கித் தந்திருக்கானே அந்த - அதுக்கென்னமோ பேர் சொல்லுவாளே பத்மஜா - மாட்டர் பெஸலா - அதே போதும் நம்மாத்துக்கு. ஏதோ பழைய ஞாபகத்துக்காக கருங்கல்ல செஞ்ச ஆட்டுக்கல்லை வாங்கலாம்னா இந்த விலை சொல்லறாளே! வாங்கோ, போகலாம்."

"நமக்கு இல்லேடி, பத்மஜாக்குத்தான் வாங்கலாம்னு கேக்கறேன். அவளுக்குத்தான் இந்த மாதிரி சாமானெல்லாம் பிடிக்குமே," என்று மாமியிடம் சொல்லிவிட்டு கடைக்காரியிடம் மீண்டும் கேட்டார் மஃப்ளர் மாமா.

"நூத்தி நாப்பது. கடைசி விலை. என்ன சொல்லறே?"

"பத்து ரூபாயிக்கு பாக்காதீங்க சாமி. உங்களுக்கு இத வித்தா எனக்கு பத்து ரூபாதான் கிடைக்கும். நூத்தி அம்பதுக்கு கீள நெசமாவே முடியாது சாமி."

"இப்ப பத்மஜாக்கு இந்த ஆட்டுக்கல்லை வாங்கலைன்னு யார் அழுதா? ஏற்கனவே இந்த ஜூஸ்காரனுக்கு நாப்பதுக்கு பதிலா அறுபது ரூபா அழுதாச்சு. வாங்கோ. நடையைக் கட்டலாம்."

மாமி போகலாம் என்று சொன்னாலும் மஃப்ளர் மாமாவுக்கு கிளம்ப மனதில்லை என்று தோன்றியது. அவர் நின்ற இடத்தை விட்டு நகருவதாகத் தெரியவில்லை.

அன்றைய முதல் போணி இப்படிப் போய்விட்டதே என்ற வருத்தம் அந்தப் பெண்ணின் கண்களில் தெரிந்தது.

சட்டென்று ஒரு முடிவுக்கு வந்த நான் அவளிடம் சொன்னேன்: "நீ சொன்னாப்ல அட்டப் பெட்டில பேக் பண்ணலாம்னு தோணுது. நீ மொதல்ல சொன்ன நூத்தி அறுபது ரூபா கணக்கில எனக்கு ரெண்டு ஆட்டுக்கல் வேணும். ஆனால், என்கிட்ட முன்னூத்தி இருபது ருபாய் கேஷ் இல்லைன்னு நினைக்கிறேன்."

அவளிடம் பேசிக்கொண்டே என்னுடைய பர்ஸைத் திறந்தேன். எங்கள் ஊர் பழக்கம் சென்னையிலும் விடவில்லை. பர்ஸ் காலியாக இருந்தது.

அவளுடைய குரலில் குதூகுலத்துடன் பதிலளித்தாள்: "அதுனால என்ன சார்? உங்க போன்ல பே-டிஎம், ஜி-பே எதுனாச்சும் இருக்கா? அத வச்சு பைசா தாங்க."

அவள் கூறிய செல்போன் நம்பருக்கு ஜி-பே மூலம் பணத்தை அனுப்பிவிட்டு ஒவ்வொரு கையிலும் மூன்று கிலோ ஆட்டுக்கல்லை எடுத்துக்கொண்டேன்.

"உங்களுக்கு எந்த ஊர் சார்?"

"அமேரிக்கா."

"நீங்க அமெரிக்கான்னுதான் நான் கெஸ் செஞ்சேன் சார்."

"அட, இங்கிலீஷ்ல நல்லா பேசறே?"

அவள் பதில் சொல்லவில்லை.

பதிலாக, அனைத்துப் பற்களும் தெரியுமாறு அழகாகச் சிரித்தாள்.

என்னதான் சிரித்தாலும், பற்கள் ஒன்றும் தெரியாத புன்னகை ஒன்றை பதிலாகத் தந்துவிட்டு நானும் அங்கிருந்து கிளம்பினேன்.

பத்து ரூபாய் அதிகமாக செலவு செய்து பத்மஜாவுக்கு ஆட்டுக்கல் வாங்காமல் அந்தத் தம்பதியும் அங்கிருந்து கிளம்பினார்கள்.

மஃப்ளர் மாமா முணுமுணுத்தது என் காதில் விழுந்தது. என் காதில் விழவேண்டுமென்றே சத்தமாகப் பேசினாரோ, என்னவோ?

"இந்த மாதிரி வெளிநாட்டுல இருந்து இங்க வந்து கண் மண் தெரியாம செலவு செய்யறதுனாலத் தான் விலைவாசி இப்படி ஒசந்துண்டே போறது. லோக்கல் எகானமிக்கும் ஒரு மதிப்பு வேண்டாமா?"

இரண்டு ஆட்டுக்கல்களுடன் நான் வீட்டுக்குள் நுழைந்ததை கவனித்த என்னுடைய அம்மா கேட்டார்.

"ஆட்டுக்கல்லா? எங்கே, காட்டு. என்ன விலை?"

அவருடைய கேள்வியை எதிர்பார்த்து அதற்கான பதிலையும் தயாராக வைத்திருந்தேன் நான்.

"இருநூறு ரூபான்னு சொன்னா. நூத்தி அறுபதுக்கு வாங்கினேன். உனக்கு ஒண்ணு, ஊருக்கு ஒண்ணு எடுத்துண்டு போறேன்."

"நன்னாத்தான் பேரம் பண்ணியிருக்கே. இன்னும் கொஞ்சம் பேசியிருந்தா நூத்தி அம்பதுக்கே தந்திருப்பா."

"…"

"பரவாயில்லை. பாக்கறதுக்கு அல்ட்ரா கிரைண்டர் கருங்கல் மாதிரியே இருக்கு."

**ச. சுரேஷ் <shompens@gmail.com>**

# டி. கண்ணன் கவிதைகள்



## கலையும் காலமும்

சினிமாவில் நடித்த கிளியொன்று தப்பித்து
எங்கள் தோட்டதிற்கு வந்தடைந்தது (ஆதாரமெல்லாம் கிடையாது)
என்றுதான் தாத்தா கதை சொல்ல ஆரம்பிப்பார்
பிராயத்தில் அப்பா அந்த கிளியிடம்
பெரும் பிரியத்துடன் இருப்பாராம்
தன் உணவை அதற்கு பகிர்ந்தளிப்பாராம்
கிளியும் அப்பாவை கொஞ்சி மகிழுமாம்
சின்ன அத்தைதான் அடிக்கடிச் சொல்வார்
'தங்கப் பதுமை' கிளி
தங்கள் வீட்டில் தங்கியிருப்பதில்
குடும்பத்திற்கும் பெருமிதம்
முதலில் இறந்தது கிளி
பின் தாத்தா
வெகு காலத்திற்கு பிறகு அப்பா
தோட்டமும் அடுக்குமாடி குடியிருப்பாகிவிட்டது
இன்று சம்சாரியான நான்
தொலைக்காட்சிப் பெட்டியில்
'தங்கப் பதுமை' திரைப்படம்
பார்த்துக் கொண்டிருந்தேன்
பத்மினியிடம் கிளி பேசும்போது
ஏனோ சற்று எழுந்தமெர்ந்தேன்



## காட்சி

அந்தி முடிந்த பின்னால்
என் ப்ரத்யேக நதியில்
மூழ்கித் திளைக்கும் தருணம்
காலம் தும்மிய
நட்சத்திரங்கள் வானில் உறைகின்றன (பாவனை)
எல்லையின்மையின் யதார்த்தம் கண் சிமிட்டுகிறது
அதன் நிழல் நதி மேல் படிகிறது
என் மேலும்

## பாவனை

கடவுள் இல்லைதான்
கடவுள் இல்லவே
இல்லைதான்

கண்ணன் குழல் வார
கோல் தேடி அலையும்
காக்கைகள்

தூக்கம் கிழிக்கும்
தூண் யாளிகள்

மாசிக் குளிரில்
அதிகாலை ஒற்றைப் பிரபையில்
பனிக்குல்லாயில் பவனி
வருகிறார்

ஆறாம் திருநாள்
ஆனை வாகனத்தில்
வேகம் காட்டுகின்றார்

கூட்டம் அதிகம்
தூரத்தே தெரிகிறது
பூச்சாண்டி கோலம்

கடவுள் இல்லைதான்

ஊர்க் கிழவர்களுக்கு
பெருமாள் எப்போதும்
இருந்து கொண்டே இருக்கிறார்

"டி. கண்ணன்" **<krishnaswamy164@gmail.com>**

# விவசாய விஞ்ஞானியின் இலக்கிய விளைச்சல்கள்

ரஞ்ஜனி சுப்ரமணியம்

மண் அளக்கும் சொல் - ஆசி கந்தராஜா; விலை ரூ. 225.00; வெளியீடு: காலச்சுவடு பதிப்பகம், 669 கே.பி.சாலை, நாகர்கோயில் - 629001; தொலைபேசி: +91 4652278525; மின்னஞ்சல்: kalachuvadu@sabcharnet.in

கால நியதிகளின்படி வாழுமை, வீரியம் ஆகிய பண்புகள் இயற்கையின் உயிருள்ள படைப்புகளுக்குப் பொருந்தக் கூடும். ஆனால், தரமான எழுத்தாளனின் எண்ணத்தில் இருந்து உதிரும் துளிகள் வரையற்ற வாழுமையின் வரம் கொண்டவை. பூங்கனியியல் உயிரியல் தொழில்நுட்பப் பேராசிரியரான ஆசி கந்தராஜாவின் படைப்பான 'மண் அளக்கும் சொல்' என்னும் இந்த புனைவுக் கட்டுரைத் தொகுதியும் இவ்வாறான நீண்ட நிலைப்புக்கு உரியதாக தகவமைக்கப்பட்டுள்ளது.

இந்நூல், தாவரங்களுக்கும் மனிதர்களுக்குமான உறவை இலக்கிய நேர்த்தியுடன் எளிமையான மொழியில் பேசுகிறது. அறிவுபூர்வமான வாசிப்பு அனுபவம் மனதில் பசுமையை நிறைக்கத் தவறவில்லை.

புனைவின் ரசம் கலந்து விஞ்ஞான உண்மைகளை எளிமைப்படுத்திக் கூறும் எழுத்து முறைமையின் தமிழ் முன்னோடியாக ஆசி கந்தராஜாவைக் கொள்ளலாம். விவசாய விஞ்ஞானி என்னும் வீரியம் மிகுந்த ஒட்டுக் கட்டையில், செழித்து வளர்ந்த ஒட்டுத் தண்டு, எழுத்தாளர் ஆசி கந்தராஜா. அவர் அளித்த பயன்தரு இலக்கிய விளைச்சல்கள் ஏராளம். தாயகத்தில் தன் வேர்களை ஆழப் பதித்திருக்கும் பெருவிருட்சமான இவர், தன் கிளைகளை புலம்பெயர் மண்ணில் பரப்பி வாழ்ந்தாலும், இந்நூலினைத் தான் பிறந்து மண் அளைந்த கைதடி மண்ணுக்கே பெருமையுடன் சமர்ப்பணம் செய்துள்ளார்.



இந்நூலுக்கான முன்னுரையை எழுதிய இலக்கியவாதியும் பொறியியலாளருமான மு. இராமநாதன், 'லியொங்கை எனக்குப் பிடித்துக்கொண்டது' என ஆரம்பித்து, 'எனக்கு கந்தராஜாவைப் பிடித்துக்கொண்டது' என முடிக்கிறார்.

அறிவியல் கூறுகளை எளிமைப்படுத்தித் தரும் சில 'நீர்த்துப் போன எழுத்து வடிவங்களுக்கு' மத்தியில் பாமரர்களும் புரிந்துகொள்ளும் வண்ணம் எளிமையும் சுவாரசியமும் நிறைந்த மொழியில் அறிவியல் கருத்துகளை விளக்கும் ஆசியின் மொழியழகை, மண்ணின் மீதான பாசத்தை விதந்துரைக்கும் முன்னுரையாளரை வாசகருக்கும் மிகவும் பிடிக்கும்.

தனது புலமை அனுபவங்களைப் பகிர்ந்துகொள்வதற்காக உலக நாடுகள் பலவற்றிற்கும் சென்று வந்தவர் பேராசிரியர். இப்படைப்பில் அவர் தாவரங்களோடு பிரிவின்றி இணைந்த பூகோளத்தின் பல்வேறு பாகங்கள் பற்றிய வரலாறு, மக்களின் வாழ்வியல் நடைமுறைகள், பாரம்பரியங்கள், அரசியல் மற்றும் மருத்துவ உண்மைகள் எனும் பல்வேறு விடயங்களையும் தொட்டுச் செல்கிறார். எழுத்தாளரும் வரலாற்று ஆய்வாளருமாகிய முனைவர். பழ. அதியமான் அவர்களின் பின் அட்டைப்பட கூற்று இதனை உறுதிப்படுத்துகிறது. 'இது உண்மையில் தாவரங்களை நிமித்தமாகக் கொண்டு மனிதர்களின் மெய்யுரைத்த நூல். மண்தான் தாவரங்களையும் வளர்க்கிறது. மனிதர்களையும் புரக்கிறது. சில கூடுதல் அறிவுடன் மனிதன் இடம்பெயரும் தாவரம்' என ரசிப்புக்குரிய மொழியில் சிறப்பிக்கின்றார்.

இத்தொகுப்பு பதின்மூன்று உபதலைப்புகளின் கீழ் அமைந்துள்ளது. சில கட்டுரைகள் வடக்கின் பாரம்பரிய



கர்வங்களாகக் கருதப்படும் பனை, கறுத்தக் கொழும்பான், உலாந்தா முருங்கை, மட்டுவில் முட்டிக் கத்தரிக்காய், வரகு முதலான தாவரங்களின் மாண்புளைக் கூறுகின்றன. சிறப்பம்சமாக, பிரதேசத்தின் தனித்துவமான மொழிவழக்கு படைப்புக்கு சுவாரசியம் அளிக்கும் விதத்தில் பயன்படுத்தப்பட்டு உள்ளது. சாமானிய மக்களின் நாளாந்த வாழ்க்கையில் உதிக்கும் பல்வேறு ஐமிச்சங்களுக்கும் இந்நூல் தகுந்த விடையளிக்கின்றது.

தொண்ணூறு வயதிலும் திடகாத்திரமான அப்பாச்சியின் பல்வளத்துக்கும் பாலனின் அபரிமிதமான புத்திர பாக்கியத்துக்கும் முருங்கைக்காயின் மகாத்மியங்கள் தான் காரணமா என 'சாத்தானின் விரல்கள்' என்ற முதல் கட்டுரை யினை வாசிக்கத் தொடங்கும் போதே, பாக்கியராஜ் படம் பார்ப்பது போல கொடுப்புக்குள் சிரிப்பு நுழைந்து கொள்கிறது. சித்த வைத்தியத்தில் 'ஆண்களின் வீரியத்துக்கும் பெண்களின் நீண்டநேரக் காதலுக்கும் முருங்கைக்காய் காரணமாகலாம்' என்பது நிரூபிக்கப்படாத ஒன்று எனக் கூறி இந்தப் பிரச்சனைக்கு தற்காலிக இடைவெளி விட்டு, ஏனைய பயன்களுக்கு கட்டுரை செல்கிறது.

'உலாந்தா' முருங்கை என்ற பெயர்க் காரணத்தின் செவிவழிச் செய்தியுடன் அம்மாவின் கறிப் பக்குவங்கள், முருங்கைக்காயின் உணவுப் பெறுமானங்கள், விரதத்துக்கு ஏன் முருங்கைக்காய் சேர்ப்பதில்லை என்ற காரணக் கதை, பாலனுக்கு 'குறண்டல்' முருங்கைக்காயை தானமாகக் கொடுத்த பெருந்தன்மைஎன நீட்சிபெறும்சம்பவக்கோர்வைகள் பேராசிரியருடன் விமானத்தில் தன்சானியாவுக்கு

பயணிக்கின்றன. கிளிமஞ்சாரோ மலைக்கு மேலான பயண அனுபவம் ஒரு அழகான கவிதையை மனதில் எழுதிச் செல்கிறது. விமானத்திலிருந்து பார்க்கும் போது 'மேகங்களைக் கிழித்துக் கொண்டு தெரியும் பனிபடர்ந்த மலைமுகடுகள் தேங்காய்ப்பூ சேர்த்து அம்மா நீத்துப் பெட்டியில் அவித்துக் கொட்டும் குரக்கன் புட்டை' நினைவுறுத்துவதாக கூறி தாயக மண்ணின் ஈரமான நினைவை மனமெங்கும் அப்பிக் கொள்கிறார்.

ஆபிரிக்கர்கள் முருங்கைக்காயை சாத்தானின் விரல்களென பாவனை செய்கிறார்கள். அதன் கொட்டைகளில் இருந்து விலையுயர்ந்த Ben oil தயாரிக்கவும் குடிநீர் சுத்திகரிப்புக்காக முருக்கம் பட்டைகளை பாவிக்கவும் மட்டுமே பெருமளவில் வளர்க்கிறார்கள்; உணவாக உட்கொள்வதில்லை எனவும் கூறுகிறார். ஆனால், முருங்கைக் காயின் உண்மையான மகத்துவத்தை அறிந்தவன் ஈழத்தவன்தான் என தன் அம்மாவுடன் சேர்ந்து கைதடி மண்ணிலிருந்துகூவவேண்டும்போலிருக்கிறது என்று ஆதங்கத்துடன் அவர் கூறும் போது அந்த நேச உணர்வு வாசகர் மனதிலும் கடத்தப்படுகிறது.

முருங்கைக்காய் போலவே யாழ் மண்ணின் அடையாளங்களில் ஒன்று மட்டுவில் முட்டிக் கத்தரிக்காய். பால் வெள்ளை நிறத்தில் உருண்டு திரண்டு முட்டி வடிவில் மினுமினுப்பாக இருக்கும். ஆனால், சொலானேசியே குடும்பத்தைச் சேர்ந்த கத்தரிக் காய்கள், செருக்கு மிகுந்த யாழ்ப்பாணத்து 'உதார்' மனிதர்கள் போல, தமக்குள்ளே வேற்றுமைகளைக் கட்டிக் காத்துக்கொண்டு கலப்படையாமல் இருக்கத் தெரியாதவை. பன்மியத்தன்மை கொண்டவை. நீண்ட ஊதாநிற லெபனீஸ் கத்தரிகளோடும் இலகுவில் கலப்படையக் கூடிய, வீரியம் குறைந்த பரம்பரை அலகினைக் கொண்டவை. இந்தக் கதையின் மண்வாசனை மிகுந்த நாயகியின் பெயர் செல்லப்பாக்கியம் மாமி. ஆஸ்திரேலிய குவாறன்ரின் கெடுபிடிகளை ஏமாற்றி, ரவிக்கைக்குள் மறைத்துக்கொண்டு வந்து சிட்னியில் நட்ட முட்டிக் கத்தரிக்காய், தனது சுயகௌரவம் இழந்து கலப்பினமாக 'பல்லிளித்ததை' அவரால் தாங்கிக்கொள்ள முடியவில்லை.

முட்டிக் கத்தரிக்காய் மீது அடங்காப் பற்றுக்கொண்ட மாமி, அவற்றின் பரம்பரை அலகினை மட்டுமல்ல யாழ் மண்ணின் தனித்துவமான தாவரங்களைப் பாதுகாப்பதற்கான வழிமுறையொன்றை உருவாக்க முயற்சிப்பதே இக்கதையின் உச்சக் கட்டம். கோயிலில் பொரித்த மோதகத்தை வாய்க்குள் அளவு கணக்கின்றித் தள்ளிக்கொண்டே, பரம்பரை அலகுகள் பற்றி அறிவியல் விளக்கம் தரும் பேராசிரியர் கண்ணுக்குள் காட்சியாய் நிறைகின்றார்.

அடுத்த அத்தியாயமான வரகு மான்மியத்தில், ''உது என்ன கோதாரியப்பா. உலகம் அழியப் போகுது'' என்று சலித்துக்கொள்கிறார் பேராசிரியரின் மனைவி. கும்பாபிஷேகத்துக்கு கோயில் கலசத்தில் வைக்க சிட்னி ஐயர் வரகு கேட்டாராம். இங்கிருந்து கதை எங்கெங்கெல்லாம் போனது என்பதைக் கேட்டே இவ்வாறு அவர் சலித்துக்கொண்டார். கோயில் கலசங்களில் வரகு இடிதாங்கியாக செயற்படும் என்பது உண்மைக் காரணமல்ல. இயற்கை அழிவுகளால் பயிர்கள் அனைத்தும் அழிந்து போனால், பாரம்பரிய விதைகளைப் பாதுகாக்கும் முகமாகவே முன்னோர்களால் இந்த ஏற்பாடு செய்யப்பட்டது. விதைகளின் வாழுமையும் வீரியமும் நீடிக்கும் முகமான Germiplasm Bank-இனை ஒத்த நடவடிக்கையே கோபுரக்கலசம் என விளக்குகிறார் பேராசிரியர்.

நவீன உலகில் மனிதர்களின் விந்து, கருமுட்டை என்பனவும் இவ்வாறே உறைநிலையில் பாதுகாக்கப் படுகின்றன. குழந்தைப் பாக்கியம் இல்லாதவர்கள் இவ்வாறு பாதுகாக்கப்படும் விந்தையோ முட்டையையோ பெற்று தமக்கு விரும்பிய இயல்புகளுடன் பிள்ளையொன்றைப் பெற்றுக்கொள்ள முடியும். அத்துடன் ஓரினச் சேர்க்கையாளர்களுக்கும் இது ஒரு வரமாகும் என விளக்க அவரது மனைவியோ, ''வம்பிலை பிள்ளை பெறுவதற்கும் இதற்கும் என்ன வித்தியாசம்'' என்பதை சற்றே நாகரிகப்படுத்தி கேட்டு தன் மன ஆதங்கத்தை வெளிக் காட்டுகிறார்.

வரகு, சாமை, குரக்கன் என சுற்றித் திரிந்த கதை பிறகு பெரியய்யாவுக்கு துலாமிதித்த ஆணழகன் கட்டையரோடு நின்றதா என்றால் அதுதான் இல்லை. பேராசிரியரின் பதின்மத்து கனவுகளுக்குக் காரணமான காதலியின் நினைவுகளிலும் அவள் முன் ஆங்கில ஆசிரியரால் தான் பட்ட அவமானங்களிலும் வந்து நிற்கிறது. இறுதியில் கென்யாவில் விவசாயக் கருத்தரங்கில் பங்கு பற்றச் செல்லும் பேராசிரியர் வரகு மூட்டையுடன் வெற்றிகரமாக சிட்னி வந்து சேர்கிறார். கட்டுரையின் இறுதி வரிகள் இலக்கிய நயம் மிகுந்தன. 'ஆஸ்திரேலியக் கண்டத்தின் கோவிலொன்றில் கலசத்தில், ஆசியக் கண்டத்தின் யாழ்ப்பாண வாசியான என் மனைவியின் உபயமாக, ஆபிரிக்கா கண்டத்தின் கென்யா நாட்டில் விளைந்த வரகு பன்னிரண்டு ஆண்டுகள் வாழப் போகின்ற மரபின் தொடர்ச்சியை' எண்ணி வாசகராக நாங்களும் மனம் நெகிழ்வோம்.

'சோத்துமாடு எக்கேடாவது கெட்டுப்போகட்டும்' என்று மனைவியிடம் வசைமாரி வாங்கும் பேராசிரியர் வீரசிங்கம் உண்மையில் அவ்வாறு அல்லவாம். 'புத்தியுள்ள மாடுதான்' என்பது அவரது மகளின் வாதம். அது உண்மைதான். 'வீரசிங்கம் பயணம் போகிறார்' எனும் கட்டுரை நகைச்சுவையாக ஆரம்பித்தாலும், உள்ளடக்கம் மனதை உறைய வைக்கும் பல உண்மைகளை

ஆதாரமாகக்கொண்டது. அழிந்துபோகும் நிலையில் உள்ள அரியவகை தாவரங்களை பாதுகாக்கவும் ஆவணப்படுத்தவும் லெபனான் நாட்டுக்குச் செல்லும் வீரசிங்கம், அங்கு நிலவும் சர்வதேச அரசியல் மற்றும் பொருளாதார அழுத்தங்களை உரையாடல்களாக வெளிப்படுத்துகிறார்.

முன்பெல்லாம் விவசாயிகள் தங்களது விளைச்சலில் ஒரு பகுதியை அடுத்த சாகுபடிக்காக ஒதுக்கி வைப்பார்கள். இன்று அந்த நிலை மாறி விதைகளை தனியார் நிறுவனங்களிடம் வாங்கிப் பயிரிட வேண்டிய நிலைமை தோற்றம் பெற்றதன் பின்னணியில், பன்னாட்டு நிறுவனங்களின் சதிமுயற்சிகள் இருப்பதை பாமர விவசாயிகள் உணர்ந்துகொள்ள முடிவதில்லை.

செயற்கை முறையில் மரபணு மாற்றப்பட்ட விதைகள் நல்ல விளைச்சலைப் கொடுத்தாலும், அவற்றை மீண்டும் விதைத்தால் அவை முளைக்காது. ஏனென்றால் அவை மலட்டு விதைகளையே உருவாக்கும் வண்ணம் மரபணு மாற்றம் செய்யப்பட்டவை. Terminator என்ற தொழில்நுட்பம் இங்கு பயன்படுத்தப் படுகிறது. இத்தாவரங்கள் மூலம் மகரந்தச் சேர்க்கைக்கு உட்படும் அதே இனத் தாவரங்களும் மரபணு மாற்றம் பெற்று, இதே போன்ற மலட்டு விதைகளையே உற்பத்தி செய்யும். இதனால் பாரம்பரிய விவசாயம் செய்வோரும் பாதிக்கப்படுகிறார்கள். விதைகளுக்காக அந்த நிறுவனங்களையே நம்பி இருக்க வேண்டிய சூழ்நிலை ஏற்படும். இதன் மூலம் அந்நாட்டின் விவசாயத்தைப் பாதித்து, பொருளாதாரத்தைச் சீரழித்து அடிமைப்படுத்தல் கைகூடுகிறது.

இந்த உண்மைகளை வீரசிங்கம் லெபனானில் வாழும் இயற்கை நலன் விரும்பியான விவசாயி ஒருவருக்கு விளக்குவதாக ஆக்கம் அமைந்துள்ளது. எளிய நாடுகளை கைவசப்படுத்த, ஆயுத யுத்தம் தவிர எத்தனை மிலேச்சத்தனமான வழிமுறைகளை ஆதிக்க நாடுகள் கையாள்கின்றன என்பது அதிர்ச்சிக்கு உரியது. இது விவசாயிகளுக்கான விழிப்புணர்வுப் பதிவும் ஆகும்.

இக்கட்டுரையில் லெபனானின் வாழும் மக்கள் தொகையில் இஸ்லாமிய சுனி, ஷியா மற்றும் மரோனைட் கிறிஸ்தவ மதப்பிரிவுகள் பற்றிப் பல சுவாரசியமான தகவல்களைத் தருகிறார். இங்கும் கூட சுதந்திரம் வழங்கப்பட்ட பின்பு, மேற்கு நாடுகளைச் சார்ந்திருக்கும் வண்ணம் அரசியலமைப்பை உருவாக்கி, பிளவுகளை தக்க வைத்து தமது ஆதிக்கத்தினை நிலைநிறுத்துகின்றனர் எனவும் கட்டுரையில் இருந்து அறியக் கிடைக்கிறது.

''நீ ஐயர் பொம்பிளை. சேர்ச்சுக்குப் போறியோ? ஒன்றில் உன் பெயரை மாத்து அல்லது மதத்தை மாத்து'' என்று ஆவேசப்படுகிறார், 'கறுத்தக் கொழும்பான்' கட்டுரையில் வரும் மண்பற்று நிறைந்த உடையார் மாமா. பிரச்சனை தொடங்கியதோ கறுத்தக் கொழும்பான் மாம்பழத்தின் மீதுள்ள காதலால். யாழ்ப்பாணத்தின் பெருமையைப் பறை சாற்றும் கறுத்தக் கொழும்பான், தேன் பலா, கப்பல்வாழை, தேன்கதலி முதலிய இனங்கள் 'அறுவான்களால்' முற்றாக அழிந்துவிடப் போகிறது என்ற கவலை அவருக்கு. சுவையும் மணமும் நிறைந்த கறுத்தக் கொழும்பானை அவுஸ்திரேலியாவில் எப்படியாவது வளர்க்க வேண்டும் என்ற கட்டுக்கடங்காத ஆவல்.

பேராசிரியருடன், சொந்தச் செலவில் தென் ஆபிரிக்காவில் டேர்பன் நகரில் நடைபெறும் மாம்பழ ஆராய்ச்சி மாநாடொன்றிற்குச் செல்கிறார். இங்கு அவர்கள் சந்திக்க நேரும் இருவரான முனைவர் டாக்டர் மன்றீயும் கத்தோலிக்க தேவாலயத்துக்குச் செல்லும் டாக்டர் ஐயரும் தென்னிந்திய வம்சாவளியினர். கொள்ளுத்தாத்தா கூலியாக தென் ஆபிரிக்கா வந்தபோது நாராயண மந்திரி என்ற பெயர் 'மன்றீ'யாக மாற்றம் பெற்றதும், ஐயர் பரம்பரை நாளடைவில் மதமாற்றம் பெற்றதும், ஆங்கிலமே பேச்சு மொழியானதும் புலம்பெயர்வின் நீண்டகால விளைவுகள்.

கறுத்தக் கொழும்பானின் பரம்பலை நிறுவப் போன உடையார் மாமா, கலாசார மாற்றத்தைத் தடுப்பதற்கே அந்நிய நாட்டில் அதிக முக்கியத்துவம் கொடுக்கப்பட வேண்டும் என்ற சிந்தனா மாற்றத்துடன் சிட்னி வந்து சேர்கிறார். கறுத்தக் கொழும்பான் சுவையிலும் மேலானது தமிழ்மொழியின் சுவை. அதைப் பாதுகாப்பதே புலத்தில் முக்கியமானது. நாளைய தலைமுறைகளுக்கு நாவிலே தமிழ் வாழ்ந்திட வேண்டும் என ஞானம் பெறுகிறார்.

ஆழ்ந்து யோசித்தால் இவையும் மரபணு மாற்றத்தை ஒத்ததாகவே எண்ணத் தோன்றுகிறது. நமது பரம்பரை அலகுகள் மாற்றம் பெறாவிட்டாலும் கலாசார மாற்றம் என்ற வலிமை மிகுந்த அந்நியக்கூறு ஒன்றின் ஆளுகைக்கு வலிந்து உட்படும் கட்டாயம் புலம்பெயர்ந்தோருக்கு வந்து சேர்கிறது. எதிர்காலத்தில் புலம்பெயர்ந்த நாடுகளுக்குரிய மொழியே தாய் மொழியாகும். தமிழ்மொழியின் பாரம்பரியம் மறைந்து போகும். இங்கு மனிதர்களும் மரங்கள் ஆகின்றனர். மண்பெயர்ந்த மரங்கள் மாற்றம் காண்பது இயற்கையே. பேராசிரியரின் கூற்றுப்படி மண் வேறு மனிதன் வேறு அல்ல என்பதும் உண்மையே.

ரஞ்ஜனி சுப்ரமணியம்
**<ranjani.subra54@gmail.com>**

# அன்றாடங்களின் கவிக்கூடு

ந. பெரியசாமி

ஒரு படிமம் வெல்லும் ஒரு படிமம் கொல்லும் - எம்.டி. முத்துக்குமாரசாமி; விலை: ரூ. 240; வெளியீடு: தமிழ்வெளி

தன் அன்றாட அனுபவங்களை மொழியின் நுட்பத்தோடு பிணைத்து நம்முள் இருக்கும் கித்தானில் ஓவியமாக்கி விடுகின்றன எம்.டி. முத்துக்குமாரசாமியின் 'ஒரு படிமம் வெல்லும் ஒரு படிமம் கொல்லும்' தொகுப்பின் கவிதைகள்.

கண்ணிமையின் அசைவுகள், மருள்த்தோற்றங்கள், நீ நான் நிலம், பித்து பிறை பிதா, கர்மவினை, புத்துயிர்ப்பு, சிதறல்கள் குறுங் கவிதைகள், நகரம் என எட்டு பகுதிகளை உள்ளடக்கிய தொகுப்பாக வந்துள்ளது இந்நூல். ஒவ்வொரு பகுதி கவிதைகளும் தனக்கேயான பிரத்யோகத்தன்மையை கொண்டிருப்பது சிறப்பு.

நிகழும் சம்பவங்களை எம்.டி.எம் கவிதையாக உருமாற்றுவதன் அழகு நம்மை வசீகரிக்கிறது. இதிலெல்லாம் கவிதைகள் உள்ளதாவென வியப்பூட்டவும் செய்கின்றன. எழுதிப் பார்த்தலின் மூலம் வெளிப்படும் மனச்சித்திரம் கட்டமைப்போடும் சிதறியும் உருவாகிக் கொண்டும் இருக்கிறது. மேகத்தின் துண்டு போல அலைவுற்றபடியும் வாழ்வின் பூரணத்தன்மையுடனும் கவிதைகள் இருக்கின்றன.

எதுவொன்றையும் கண்டு அதனுள் உணர்ந்து வாழ அதற்கான மனபோக்கு அவசியம் என்பதை உணர்த்தும் கவிதைகளைக் கொண்டு நம்மை வசீகரிக்கிறது, தொகுப்பின் முதல் பகுதியாக இருக்கும் 'கண்ணிமையின் அசைவுகள்'.

தான் வாழ்ந்த ஒன்றை, அதிலிருக்கும் ஒளிர்வுகளை மெல்ல நம்முள் இறக்கி வைத்தபடியே செல்வது அசாத்தியமிக்கதோர் கலை. அக்கலை எம்.டி.எம்மிற்கு லாவகமாக கைகூடியுள்ளது. பொருநை நதியோடு நம்மையும் பயணிக்கச் செய்திடுகிறார். பொருநைக்கான துயர்கள் நமக்கானவையாக மாற்றம்கொள்ளச் செய்கிறார். நம்முள்ளும் இனி பொருநை ஓடிக்கொண்டே இருக்கச் செய்கின்றன கவிதைகள்.



'நீ நான் நிலம்' பகுதி கவிதைகள் இழப்பின் நினைவுகளில் நம்மை சுழன்றாடச் செய்கின்றன. குரல் எனும் மாயக்கிணறு நம்மை உள் இழுத்தபடியே இருக்கும். திருச்செந்தூர் கவிதையில் வரும் குறத்தியின் மஞ்சள் பூசிய முகம் சொல்லும் சேதி நமக்கானதாகவும் இருக்கிறது. தலைமேல் விழும் தளிர் ஒன்றின் ஆசி எளிதில் கிட்டுவதில்லை. வனம் நம்மால் அழிக்கப்பட்டுக் கொண்டே இருக்கிறது. வெட்டப்பட்ட மரங்கள் பயன்கொள்ளும் பொருள்களாக மாறி அதன் ஒளிர்வை தன்னுள் வைத்துக்கொண்டே இருப்பதை 'வனநினைவு' கவிதை சுட்டுகிறது. இதன் நீட்சியாக இருக்கிறது 'முகத்தை துடைத்துக் கொள்' கவிதை.

'காலம் இனியொரு நிலமற்ற கடைத்தெரு' எனும் வரிகள் நம்மை இம்சிக்கவே செய்கின்றன. அழிவும் உருவாக்கமும் இயல்புதான். எதை அழித்து எதை உருவாக்குகிறோம் என்பதையும் கணக்கில்கொள்ள வேண்டியிருக்கிறது.

அப்பாக்களுக்கும் மகன்களுக்குமான பிணைப்பு கொஞ்சகாலம் மட்டுமே. குறிப்பிட்ட காலத்திற்குப் பின் ஒருவித விலகல் வந்துவிடுவது இயல்பாகிவிடுகிறது. கேள்விக்கான பதில், பதிலுக்கான கேள்வி என்று உரையாடல் நேரம் மிளகாகி விடுகிறது. அப்பாக்களின் இறப்பிற்குப் பின் அவர்களுடனான உரையாடல் நினைவின் சங்கிலியாக கோர்த்துக்கொண்டே இருக்கும். அப்பாக்களிடையே இருந்த புதிர்கள் நம்முன் காட்சிகொள்ள பெரும் வியப்பாக உருக்கொள்ளும். அவர்கள் பயன்படுத்தியவைகளை அவர்களாகவே நடமாடும் உணர்வை உருவாக்கும். இவ்வனுபவங்களை உணர்வுபூர்வமாக கொண்டுள்ளன 'பித்து பிறை பிதா' பகுதியிலிருக்கும் கவிதைகள்.



ஒற்றைப் பொருளை மட்டும் சுமந்துகொண்டு இராது, வாசிக்கும் போதெல்லாம் வெவ்வேறாக தன்னை புதுப்பித்துக்கொண்டே இருக்கின்றன குறுங்கவிதைகள்.

இறப்பின் ஊர்வலத்தில் ஒவ்வொருவர்க்குள்ளும் இறந்தவர்கள் குறித்த நினைவு இருந்து கொண்டே இருப்பதை கூறும்

பாடைக்கு வீசிய பூவிதழ்களின்
சாலைச் செவ்வந்தி மஞ்சள்
நடுவே தனித்து கிடக்கும்
வாடாமல்லி

என கவிதையில் வரும் வாடாமல்லி, நபர்கள் குறித்து நம்முள் படிந்து கிடக்கும் நினைவின் துளியாகவும் பார்க்க முடிகிறது.

குறுங்கவிதைகளின் சிதறல்கள் நம்முள் ஒளித் துண்டுகளை உருவாக்கிச் செல்கின்றன. நம்முள் கிடக்கும் மேகங்கள், வேட்கையின் பரிணாமங்கள், ஒன்றை உள் வாங்குதலின் ரகசியம், அன்றாடங்கள் கவிதைகளுக்குள் உலாவுதல், தெருவோர தீர்க்கதரிசிகளை அடையாளப்படுத்தல், ஏரி ஏரியற்று போவதன் துயரிலிருந்து விடுதலையை அடையாது சிக்குண்டு கிடத்தல், ரப்பர் முலைக் காம்புகளை இன்னமும் சப்பிக் கொண்டிருக்கச் செய்யும் பழக்கப்படுத்தப்பட்ட வாழ்வு என இளைப்பாறவும் எதிர்கொள்ளவும் கண்முன் நீண்டு கிடக்கும் வாழ்வின் நிறங்களை எம்.டி.எம் நமக்காக மாற்றம்கொள்ள வைத்திடுகிறார்.

இன்று நெகிழித்தாள் சாப்பாட்டு இலையான காலம். வாழை இலை, தையல் இலை எல்லாம் கனவுக்கும் கவிதைக்குமான கருப்பொருளாக மாறிப்போய்விடும் போலும். 'தையல் இலை' கவிதை அத்தனை நெருக்கமானதாக இருந்தது.

மரத்தின் அடியில் கட்டப்பட்டிருக்கும் திட்டில் நிறைய பேர் அமர்ந்திருப்பர். மரம் உதிர்க்கும் இலைகள் எல்லோர் மீதும் பட்டுச் செல்லும். யாரோ ஒருவர் தொடுவது போன்றும், தன் காதலின் ஸ்பரிசம் போலும், நதியில் மிதப்பது போன்றும், சிட்டுக் குருவியொன்று தோல் அமர்ந்தது போன்றும் ஒவ்வொருவருக்கும் வெவ்வேறான உணர்வுகளை உருவாக்கிவிடுகிறது. 'நகரம்' பகுதி கவிதைகளை இப்படியாக பார்க்கலாம். அன்றாடத்தின் நிகழ்வுகள் ஒன்றுபோல் சுழற்சியாக இருந்தபோதும், வாழ்ந்து கொண்டிருக்கும் ஒவ்வொருவருக்கும் வேறானதாகவே இருக்கும். 'நகரம்' கவிதைகள் அனுபவங்களின் மொக்கு வாசகர்கள் தேவைக்கேற்ப மலர்த்திக் கொள்ளலாம்.

"ஒரே ஆறுகளில் காலடி எடுத்து வைப்பவர்கள் மீது வெவ்வேறு மற்றும் எப்போதும் வேறுபட்ட நீர் கீழே பாய்கிறது" எனும் ஹெராக்லிட்டஸ் கூற்று நமக்கும் தெரிந்ததுதான் எனக்கூறி ஆற்றுக்கும் ஆடிப்பெருக்குக்குமான முடிச்சைகாட்சிபடுத்துதலில் நாமும் நம் நினைவுகளில் தேங்கிக் கிடக்கும் ஆடிப்பெருக்கில் வாழச்செய்கிறது கவிதைகள். பார்ப்பது எல்லாம் வாழ்வது என்றாகிவிடாது. ஆற்றை பார்ப்பதற்கும் ஆற்றோடு வாழ்வதற்குமான அனுபவம் அவரவர்களுக்கானது.

மொழிக் கடலில் கவிதைகளை கைப்பிடி உப்பாக கரைத்து கர்மவினையாற்றியபோதும் சமயங்களில் கரையொதுங்கி வேடிக்கை பார்ப்பவர்களாகவும் இருப்பதை நினைவுபடுத்துகின்றன 'கர்மவினை' பகுதி கவிதைகள்.

உலகம் அதனதன் போக்கில் இருந்து கொண்டிருக்கையில், நம்முள் துளிர்க்கும் கேள்விகள், வலிகள், மாற்றங்கள், மனம் சமாதானம் கொள்ள நாமே உருவாக்க வைத்துக்கொள்ளும் தத்துவங்கள், பழைய சுவர் கடிகாரமாக சோர்வுற்ற மனதிற்கு சாவி கொடுப்பதுபோல், நம் வாழ்விலிருந்து நம்மை உயிர்த்தெழச் செய்யும் காரணிகள் உருவாகத்தானே செய்கிறது என்பதை 'புத்துயிர்ப்பு' பகுதி கவிதைகள் காட்சிபடுத்துகின்றன.

"ந. பெரியசாமி" **<na.periyasamy@gmail.com>**

# சட்டகத்துக்குள் அடைப்படாத கடல்

**நா. கோகிலன்**

லிங்க விரல் (கவிதைகள்) - வேல் கண்ணன்; விலை : 110.00; வெளியீடு: யாவரும் பதிப்பகம், எஸ்ஜிபி நாயுடு வளாகம், வேளச்சேரி பிரதான சாலை, தண்டீஸ்வரம் நகர், வேளச்சேரி, சென்னை, தமிழ்நாடு - 600042; தொலைப்பேசி: +91 90424 61472; மின்னஞ்சல்: yaavarum1@gmail.com

ஒரு சிறுவன் தன் பிஞ்சு விரல்களை விரித்து செல்போனின் டார்ச் வெளிச்சத்தை உமிழச் செய்து தன் விரல்களுக்கு பாய்ச்சுகின்றான். ஒவ்வொரு முறையும் ஒளியை உள் வாங்கும் உள்ளங்கை மறுபக்கம் பிரதிபலிக்கும் இரத்த வண்ணம் அவனுக்கு ஆச்சரியத்தையும் வியப்பையும் தந்துக்கொண்டே இருக்கிறது. அவன் அந்த வெளிச்சத்தை தன் கைகள் முழுவதும் நத்தையின் நகர்வை போல ஊர்ந்து செல்ல விடுகிறான். வெளிச்சம் ஊடுருவ ஊடுருவ அவன் கைகளில் தெரியும் வண்ணம் தாண்டி இப்போது அவனுடைய பச்சை நரம்புகளும் பார்வைக்கு புலனாகிறது.

உள் நோக்கி நகரும் இந்த பார்வையில் வெவ்வேறு காட்சிகளை புலப்படுத்தும் விரல்களை போல வேல்கண்ணன் கவிதைகளும் வாசிக்க வாசிக்க இன்னொரு பார்வை தருகிறது. வெளிச்சம் தந்த செல்போனா? உள்ளங்கை உள் வாங்கி பிரதிப்பளித்த குருதி வண்ணமா? அதில் கிளைகள் விரித்த பச்சை நரம்புகளா? இதில் எது அவருடைய கவிதைகள்? நான் அந்த மூன்றையும் எடுத்துக்கொள்கிறேன். அவர் கவிதைகளின் படிமங்களும் அவ்வாறாகவே இருப்பதாக எனக்கு புரிந்த வரையில் நம்புகிறேன். அந்த வகையிலேயே இந்த தொகுப்பின் மீது கவனத்தையும் வாசிப்பையும் செலுத்துகிறேன்.

இருபத்திநான்கு மணிநேரமும் இயங்கிக் கொண்டிருக்கும் மருத்துவமனையின் வரவேற்பறையில் காட்சிக்கு வைக்கப்பட்ட கண்ணாடி தொட்டியில் நீந்திக் கொண்டிருக்கும் மீன்களுக்கு இரவென்பது எது? எப்போதும் அணைக்கப்படாத மின் விளக்குகளால் கூசச் செய்யும் வெளிச்சம் பகலா? இரவா? இரவென்பது, பகலென்பது தனக்கு இரைப்போடும் கைகளின் மாறுபாட்டில் இருக்கிறதா?

வேலையற்றவனின் பகல் பொழுதும் நோயுற்றவனின் இரவு பொழுதும் மிக நீண்டது என்ற எஸ்.ராவின் எழுத்தில் சொல்லப்படுவதுபோல் நோயுற்றவர்களின் இரவு வாழ்வு மட்டும்தான் நீண்டதா? நோய்மைக்கான வாதையோடு ஒரு இரவை கடக்கும் ஒருவரின் இரவென்பது அந்த தொட்டி மீன்களின் உலகத்தைப் போன்றதுதானே?

நள்ளிரவு ஒன்றில் சென்னையிலிருந்து கூட்டம் பிதுங்கி வழியும் இரயிலில் முன்பதிவு செய்யாத பெட்டியில் தொத்தி ஏறி வந்தேன். ரயில் அரக்கோணம் வந்தது. அங்கே காதில் விழுந்த இரண்டு குரல்கள். அந்த பெட்டியில் இருக்கை கிடைத்து உட்கார்ந்து வருபவர், "இவ்வளவு சீக்கிரம் அரக்கோணம் வந்துடுச்சா?" என்றார்., ஒரு காலை மாற்றி ஒரு காலை ஊனி வைத்து ஒரு மணி நேரமாக நிற்பவர் "இப்பதான் அரக்கோணமா?" என்றார். இந்த இருவரின் குரலில் இருக்கும் சௌகரியம்தான் ஒரு நேரத்தை, காலத்தை, ஒரு காத்திருப்பை எளிதாக்குக்கிறது. அல்லது சுமையாக்கிறது. இதை





இரவு நிரப்புதலின் அளவு
அதன் காலங்களில்
புதைந்து கிடக்கிறது

என்று கவிதையாக்கும் வேல்கண்ணன் காலத்திடம், மது, புணர்ச்சி, நண்பர்கள் கூடுகை, இசை, நடனம் என பட்டியல் இடுகிறார். ஆனால், இரவை

நிரப்ப யாராலும் முடிவதில்லை.
இரவை நிரப்புதல் என்பது
கொஞ்சம் கொஞ்சமாய
நானே என்னைத் தின்னுதல்

என்று முடிக்கும்போது இரவை நிரப்ப நாம் நம்மையே கொடுக்கவேண்டும் என்பதாக முடிக்கிறார். இரவுக்கு தன்னை தின்னக் கொடுப்பவர்களின் பட்டியல் எப்போதும் நீண்டதாகவே இருக்கிறது. அந்த வகையில் இந்த கவிதை மன இருளுக்குள் மின்மினியாகிறது. அல்லது ஒரு வெட்ட வெளிச்ச அறைக்குள் ஜன்னல்களை, கதவுகளை அடைத்து இருளை உருவாக்கிகொள்ள முடிகிறது.

அலைகளுக்கு இடைப்பட்ட காலம்
ஸ்வரங்களுக்கு இடையேயான மௌனம்
வரிகளுக்கு இடையேயான தவிப்பு
தவிர்த்து,
வேறொன்றும் இருப்பதாகவே தோன்றுகிறது.

இதயத் துடிப்புகளுக்கு இடைப்பட்ட காலம், கண் சிமிட்டலுக்கு இடைப்பட்ட காலம், ஊசல் கடிகாரத்தின் வலது இடது காலம் என ஒவ்வொன்றின் காலமும் அறிவியல்படி துல்லியம் கொண்டது. ஆனால், எதார்த்த வாழ்க்கைக்கு பின்னால் இந்த கால இடைவெளி என்பது வேறொன்றாக மாறுகிறது.

அந்த வேறொன்று என்னவாக இருக்கும். எடுப்பதற்குள் நின்றவிட்ட தொலைபேசியின் அழைப்புக்கு பின்னால் இருக்கும் குரல் சொல்ல வந்தது என்னவாக இருக்கும். மீண்டும் அழைக்கும்போது முதலில் அழைத்த அழைப்பிற்கான நோக்கத்தை வெளிப்படுத்த முடிகிறதா? இடது கைக்கு தெரியாமல் கொடுக்கும் கர்ணனின் வலது கையை போல ஒவ்வொரு முந்தைய அழைப்பிற்கும் எடுக்க முடியாத அலைபேசியில் பிந்திய அழைப்பில் எது மாறுகிறது. உண்மையில் சொல்ல வந்ததை அப்படியே இரண்டாவது அழைப்பில் சொல்லி இருப்பார்களா? அழைத்த போது எடுக்காத செல்பேசியில் உறைந்திருக்கும் மௌனம் பின்பு குரலாக மாறியும் அது எப்போதும் போல நலம் விசாரிப்பை போல கடந்து போய்விட கூடுமோ?

நானும் என் ஐந்து வயது மகனும் இரயில் நிலையத்தில் உட்கார்ந்துபோகிறவருகிறஇரயில்களை பார்த்துக்கொண்டு இருந்தோம். ஏசி ரயில் ஒன்று கடக்கும் போது அந்த இரயிலின் ஜன்னல்கள் உள்ளே இருப்பவர்களை காட்சிபடுத்தும் திரையாக பட்டது. அவன் போகிற போக்கில் 'இந்த ஜன்னல்கள் ஒவ்வொன்றும் ஒரு ஐஸ் க்யூப் போல இருக்குப்பா' என்றான். எனக்கும் அவனுக்கும்மான இந்த பார்வைதான் அவரின் கவிதையாக வந்தடைக்கிறது.

இப்படியான ஒரு உரையாடலை - ஒவ்வொருவர்க்கான நூலிழை விலகல் - என்ற கவிதையில் தோய்த்து நகர்த்துகிறார் வேல்கண்ணன். குறிப்பாக வரிகளுக்கு இடையேயான தவிப்பு. அது வாசிப்பவரையும் நகர்த்துகிறது. இது அந்த கவிதை செய்யும் மாயவித்தை. அப்போதே வாசிப்பை நிறுத்திவிட்டு அடுத்த கவிதையை நோக்கி நகரும் முன் ஏற்படும் மௌனம் அல்லது தவிப்பு. இந்த கவிதை செய்யும் தாத்பரியம் அதுவே.

ஒவ்வொரு வாகனத்திற்கும் ஒரு சத்தம் இருக்கிறது, செருப்பு தேயும் ஓசை வைத்தே ஒருவரை அனுமானிக்க முடிக்கிறது. வீட்டின் கதவை திறக்கும் இரைச்சல் வைத்தே இன்னாரென தீர்மானிக்க முடிகிறது. இசையாக, இரைச்சலாக யாரோ ஒருவர் எதையோ செய்யும்போது நமக்கு இரண்டில் ஒன்றாக புலப்படுகிறது.

தினதோறும் யாரோ ஒருவர் ஓசையின் வழியாக தன் இருப்பை இங்கே காட்டுகிறார்கள். மக்காசோளம் விற்பவரின், பால் வியாபாரியின், பஞ்சு மிட்டாய் விற்பவரின் மணி சத்தம் அவர்களின் வருகையை உணர்த்துகிறது. பார்வையற்றவரின் கைதடியின் 'டொக் டொக்' சத்தம் கூட அவரின் வருகைக்கான மூன்றாவது காலடி.

ஒரு முறை வாடகை வீடு மாறினோம்... பொருட்களை ஏற்றிக்கொண்டு புது வீட்டின் வாசல் கதவை 'கீறிச்' ஒலியோடு திறந்தது தாழ்ப்பாள். எங்கிருந்தோ ஒருநாய் ஓடிவந்துவாலாட்டிக்கொண்டு நின்றது. சிறிது நேரம் இப்படி போவதும் வருவதுமாக அந்த நாய் அங்கேயே சுற்றிக்கொண்டிருந்தது. ஒவ்வொரு முறை அந்த 'கீறிச்' ஒலிக்கும்போது அந்த நாயின் வருகை தவறவில்லை. பக்கத்து வீட்டில் இருந்த ஒருவர் சொன்னார். "சார் இதுக்கு முன்ன இந்த வீட்ல இருந்தவங்க இந்த நாய்க்கு சோறு வைப்பாங்க, இந்த டாப்பாள் திறந்தாவே அந்த நாய்க்கு அவங்க சோறு போடதான் திறக்கறாங்கன்னு தெரிஞ்சு ஓடி வந்துடும் சார்... அவங்க காலி பண்ணி போயிட்டாங்க.. இருபது நாளா பூட்டி இருந்துச்சு... அன்னைக்கு நீங்க கதவு தொறந்ததும் அதுக்கு சந்தோசம் சார்... அதான் நீங்க கதவு திறக்கறப்பல்லாம் வந்து வாலாட்டி நிக்குது" என்றார்.

கவிஞரின் - ஓசையின்மை - கவிதை காட்டும் காட்சிகள் கடைசி ஒரு வரி மனதை அசைத்து பார்க்கிறது. நேற்று ஒலித்த செல்போன் ரிங்டோன் இன்று இல்லை... ஆனால், நினைவில் அந்த ரிங்டோன் விடாமல் அடித்துக்கொண்டே இருக்கிறது... இந்த பிரபஞ்சம் எழுப்பும் ஓசையை கதவுகளை அடைத்து, காதுகளை அடைத்து கேட்காத இருண்மைக்குள் நம்மை குறுகிக்கொள்ளலாம். ஆனால், நமக்குள்ளே கேட்டுக்கொண்டே இருக்கும் சத்தத்தை எப்படி நிறுத்துவது. கிறீச் ஒலியை கேட்டதும் வாலாட்டியபடி ஓடி வரும் நாய்க்குட்டி போல... நானும் ஏதோ ஒரு ஓசையின் பின்னால் மனதை ஓட விட்டுக்கொண்டிருக்கிறேன். அதுவும் நின்றுப்போன ஓசையின் பின்னால்.

வேல்கண்ணன் கவிதைகளில் காட்டும் படிமங்கள், காட்சிகள், ஆரம்ப வரிகளில் வேறொன்றாக காட்டி கடைசி ஒரு வரியில் அல்லது ஒரு பத்தியில் அந்த கவிதையின் ஒட்டுமொத்த பார்வையையும் மாற்றி விடுகிறது. தொகுப்பில் நிறைய கவிதைகள் அந்த வித்தையை செய்கிறது. அதில் ஒன்று - மலை தரிசனம் - என்றொரு கவிதை.

> சுள்ளிகளைச் சேகரிக்க
> வெறுங்காலுடன்
> மலையேறிக் கொண்டிருக்கிறது
> முது நிழல்

நான் மலையின் அருகாமையில் இருப்பவன். பால்யத்தில் என்னோடு படித்த பல நண்பர்களின் வாழ்வு அந்த மலையோடு இயைந்தது. எனக்கு அந்த மலை இயற்கையின் தரிசனம். ஆனால், அவர்களுக்கு ஆடு மேய்க்க, விறகு பொறக்க என அவர்களின் பொருளாதாரம் சார்ந்தே அவர்களை பழக்கபடுத்தியிருந்தது. வயது வித்தியாசமில்லாமல், விறகு எடுக்க போவார்கள். அவரவரின் சுமைக்கு ஏற்றார்போல் ஊர் பகுதியில் விலை போகும். செருப்பில்லாமல் பாறை, முள், சகதி என சுற்றி சுழலும் அவர்களின் கால்களை என் நினைவிலிருந்து மீட்பே இந்த கவிதை கிளர்த்தும் தரிசனம்.

> "தாத்தா செறுப்பில்லாம உன் காலு சுடாதா?"
> "பழகிடுச்சுடா சுடாது."
> "அப்போ செறுப்பு வாங்கறது கஷ்டம் இப்பதான் ஈசியா கிடைக்குதில்ல, வாங்கி தரட்டா."
> "இனி செறுப்புக்கு என் கால் பழகுமான்னு தெரியலடா? அந்த மலைக்கு, இந்த மண்ணுக்கு என் கால் பழகிடுச்சுடா."

என்ற நண்பன் தாத்தாவின் கால்களை தொட்டபோது சுட்டது எழுபது வருட அனல். உதிர்ந்தது எழுபது வருட மண்.

சமீபத்தில் முகநூலில், வாட்ஸ்அப்பில் அதிகம் பகிரப்பட்ட ஒரு குரல் ஒரு சிறுவனுடையது.




"எப்புட்றா..." என்ற அந்த குரலில் ஒலித்த அழகியல்தான் அந்த குரலை மீம்ஸாக்கி சுற்றவிட்டார்கள். அப்படி சில குரல்கள் நம்மை துரத்திக்கொண்டே இருக்கும்... ஹஸ்கி வாய்சில், குதூகலமாக, கூப்பாடாக, ஒப்பாரியாக, ரணமாக என ஒவ்வொரு குரலும் நம்மை ஏதோ செய்திருக்கும். அப்படி - வளரும் புத்தர் - கவிதையில் ஒலிக்கும் புத்தம் சரணம் கச்சாமி குரலும் வாசிக்கும்போது அசைத்து பார்க்க தவறவில்லை.

என்றோ செல்லும் சுபகாரியங்களுக்கும்
அடிக்க வட்டிக்குப் பணம் கேட்கச் செல்லும்போது
சில நொடிகள் புத்தரைப் பார்த்தபடியே முணுமுணுப்பார்
அம்மா
"புத்தம்... சரணம்... கச்சாமி"

குலச்சாமிக் கொடைக்குச் செல்லும்போது
தவறாமல் அனைவரையும் கும்பிட்டு வரச் சொல்லுவார்
அப்பா
"புத்தம்... சரணம்... கச்சாமி"

அக்காவை பொண்ணு பார்க்க வந்தவர்களின்
பொதுவான கேள்வி "எதுக்கு மாட்டி வச்சு இருக்கீங்க?"
இலவசமாகத் தந்தார்கள்
"கழட்டிடுங்க"

திருமணத்திற்கு முதல் நாள் அன்று
மூன்றாம் அக்கா ஓடிப்போன
சில நாட்களில் தூக்கிட்டு இறந்தார்
மூத்த அக்கா

வீடு மாற்றியும்
உத்திரத்தில் தொங்குகிறது
"புத்தம்... சரணம்... கச்சாமி"

இந்த கவிதையின் "புத்தம்... சரணம்... கச்சாமி" என்ற சொல்லுக்கு பின்னால் ஒரு வாழ்வை சிலந்தி வலையென பின்னிச்செல்லுகிறது. ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு விதமான பின்னலை கொண்டிருந்தாலும் ஒருவருக்கு பின்னும் வலையில் இன்னொருவர் பலியாவது மரபின் நீட்சி.

இந்த கவிதையோடு பொருந்தக்கூடிய இன்னொரு கவிதையையும் இதோடு தொடர்புபடுத்தி பார்த்துக்கொள்கிறேன்.

ஒரே முகாமில்
உலாவியதும் உறங்கியதும்
நினைவிலாட,
தழுவிட வரும்
உன்னிடத்தில் சொல்ல நினைப்பது
"எனது போர் வேறானது
நெருங்காதே, தப்பித்துக் கொள்"

முகாமோ வீடோ ஓரிடத்திலிருந்து பயணித்தாலும் அவரவர்களுக்கான குறிக்கோளும் எல்லையும் மாற்றத்திற்குட்படுகிறது என்பதை நிதர்சனமாக வெளிப்படுத்துகிறது இந்த கவிதை.

லிங்க விரல் தொகுப்பில் உள்ள பல கவிதைகள் ஆத்மார்த்தமாக மனதோடு பேசுகிறது. 'ஒன்றில் நிற்கிற சகலமும்', 'சொற்களைத் திரட்டிச் செய்த கூட்டில்', 'நழுவாத இளகிய துகள்', 'நறுமணத் துயில்', 'கடலசைக்கும் கப்பலுக்குள்' என்று பல கவிதைகளில் அழகியல் பூக்கவும் செய்கிறார்.

ஒரு சதுர சட்டகத்துக்குள் மேகத்தையோ கடலையோ இருளையோ வெளிச்சத்தையோ புகைப்படமாக குறுக்கி மாட்டிக்கொள்ளலாம். அவர் அந்தசட்டகத்துக்குள் அடைப்படாத கடலை, இருளை, வெளிச்சத்தை, வானை கவிதையாக்கியிருக்கிறார். இது மனிதர்களின் மனதிற்கும் பொருந்தும்தானே?

அவரின் அனுபவ சுழற்சியில் அல்லது அவர் கண்டடைந்ததை இன்னும் இன்னும் கவிதையாக்க வேண்டும்.

ஒரு தொகுப்புக்கும் இன்னொரு தொகுப்புக்கும் நீண்ட இடைவெளி எடுத்துக்கொண்டு வெளியிடும் வேல்கண்ணனின் மூன்றாவது தொகுப்பு நான்கு வருடங்கள் கடந்து வந்திருக்கிறது. தேங்கிய மழை நீரில் படர்ந்த பாசியின் மணமா? முற்றிய கதிரின் வாசமா? நான் இரண்டாவதையே எடுத்துக்கொள்கிறேன்.

நா. கோகிலன் <na.kokilan@gmail.com>

# பரந்து கெடுதல்

**முன்ஷி பிரேம்சந்த்**
தமிழில்: **கயல்**

வாரணாசி மாவட்டத்தின் பீரா கிராமத்தில், பூங்கி எனும் முதிய மலைவாசி விதவைப் பெண் வாழ்ந்து வந்தாள். அவளுக்குக் குழந்தைகள் இல்லை. சொந்தமாக ஒரு சிறு துண்டு நிலமோ வசிக்க ஒரு வீடோ இல்லாத அவளுடைய ஒரே வாழ்வாதாரம் ஒரு கரி அடுப்பு மட்டுமே. அந்தக் கிராம மக்கள் தானியங்களை மட்டுமே தினமும் தங்கள் ஒரு வேளை உணவாக உண்பது வழக்கம். அதனால் பூங்கியின் கரி அடுப்பைச் சுற்றி எப்போதுமே கூட்டம் இருக்கும். எந்த தானியத்தைக் கொடுத்தாலும் அவள் அதை அரைத்தோ வறுத்தோ தருவாள்.

அந்த அடுப்பு இருந்த அதே கொட்டிலின் ஒரு மூலையில் அவள் உறங்குவாள். விடிந்தவுடனேயே எழுந்துவிடும் அவள் அடுப்புக்குத் தீமூட்டுவதற்காகச் சருகுகளைச் சேகரிப்பதற்காக வெளியே கிளம்பிவிடுவாள். காய்ந்த இலைகள், குச்சிகள் ஆகியவற்றை அடுப்புக்கு அருகில் அடுக்கி வைப்பவள் பன்னிரெண்டு மணியானதும் தீமூட்டுவாள். ஆனால், அந்தக் கிராமத்தின் உரிமையாளரான ஜமீன்தார் உதய்பன் பாண்டேவுக்கு தானியம் வறுத்துத் தர வேண்டிய நாட்களில் மட்டும் அவள் பசியுடன்தான் படுக்கைக்குச் செல்வாள். ஏனெனில், அவள் ஜமீன்தார் உதய்பன் பாண்டேவுக்கு ஊதியம் இல்லாமல் வேலை செய்யவேண்டிய கட்டாயத்தில் இருந்தாள். அவரது வீட்டிற்கு அவள் தண்ணீர் வேறு எடுத்துத் தரவேண்டி இருந்ததால், அடிக்கடி அடுப்பில் வேலை நடக்காது நின்றுபோகும்.

ஜமீன்தாரின் கிராமத்தில் அவள் வாழ்ந்த காரணத்தால் எந்த ஒரு வினோதமான வேலையையும் செய்யச் சொல்ல அவருக்கு அவள் மீது முழு அதிகாரம் இருந்தது. அவரிடம் வேலை செய்வதன் மூலம் அவளுக்கு உணவு கிடைக்கிறது என்றால் அதனை ஊதியம் இல்லாமல் செய்யப்படும் வேலையாக எப்படிக் கருதமுடியும் என்பதே அவருடைய எண்ணம். இன்னும் சொல்லப் போனால், தன்னுடைய கிராமத்தில் அவளை வாழ அனுமதிப்பதே அவர் அவளுக்குச் செய்கிற உதவி என்று அவர் நினைத்தார்.



அது, வசந்த காலத்தின் முதல் நாள். புதிதாக விளைந்த தானியங்களை வறுத்து சாப்பிட்டு, பிறருக்குப் பரிசாகவும் தரும் வழக்கம் அங்கு இருந்தது. ஊரில் அன்று யார் வீட்டிலும் அடுப்பு பற்றவைக்கப்படாததால் பூங்கியின் அடுப்பு அன்று தொடர்ந்து எரிந்து கொண்டிருந்தது. கிராமத்தில் நடக்கும் ஒரு கண்காட்சியைப் போல அவளைச் சுற்றிக் கூட்டம் கூடி இருந்ததால் அவளுக்கு மூச்சு விடக்கூட நேரம் இல்லை. வாடிக்கையாளர்களின் பொறுமையின்மையால் கூச்சலும் சச்சரவும் வெடித்தது.

அப்போது ஜமீன்தார் உதய்பனின் இரண்டு வேலையாட்கள் அங்கு வந்தனர். அவர்கள் இருவர் கைகளிலும் ஒரு தானியக் கூடை இருந்தது. அவள் அந்த தானியங்களை உடனடியாக வறுத்துத் தருமாறு ஜமீன்தார் கட்டளையிட்டிருந்தார். அந்தப் பெரிய கூடைகளைப் பார்த்ததும் பூங்கி பயந்தாள். மணி ஏற்கனவே பன்னிரண்டு ஆகி இருந்தது. அவள் சூரிய அஸ்தமனம்வரை இடை விடாது வறுத்தாலும் அவளால் அதை வறுத்து முடிக்கமுடியாது. இருட்டின பிறகும் வேலை முடிய வாய்ப்பே இல்லை. போதாததற்கு இதற்குக் கட்டணமும் இல்லை. இப்படிப் பற்பல சிந்தனைகளுடன் அவள் விரக்தியோடு அதிலொரு கூடையைக் கையில் எடுத்தாள். குற்றேவல் செய்பவர்களில் ஒருவன் அச்சுறுத்தும் தொனியில், "சிறிது நேரத்தையும் வீணாக்காதே. இல்லை என்றால் அதற்காக பிறகு நீ வருத்தப்படவேண்டி இருக்கும்" என்றான்.

இந்தக் கட்டளையுடன் அந்த இரு வேலையாட்களும் அங்கிருந்து போய்விட்டார்கள். பூங்கி மறுபடி தானியங்களை வறுக்க ஆரம்பித்தாள். எட்டு வீசை அளவு தானியத்தை வறுப்பது என்பது சாதாரண விஷயம் அல்ல. நெருப்பு தொடர்ந்து எரிவதற்காக அவள் இடையிடையே வறுப்பதை நிறுத்த வேண்டியிருந்ததால் சூரிய அஸ்தமனத்தின்போது பாதி வேலை கூட முடியவில்லை. ஜமீன்தாரின் ஆட்கள் வந்து விடுவார்களே என்ற பயத்துடன் அவள் இன்னும் படுவேகத்தில் தன் கைகளை அசைத்து வறுக்க ஆரம்பித்தாள்.

விரைவிலேயே திரும்பி வந்த வேலைக்காரர்கள், "சரி, தானியத்தை வறுத்தாகிவிட்டதா?" என்று கேட்டனர்.



தைரியத்தை வரவழைத்துக்கொண்ட பூங்கி, "நான் இப்போதுதான் அதை வறுத்துக் கொண்டிருக்கிறேன். உனக்கென்ன கண்ணா தெரியவில்லை?" என்றாள்.

"இரவே வந்துவிட்டது. நீ இவ்வளவு தானியத்தைத்தான் வறுத்து முடித்தாயா! இது முற்றிலும் வேகவே இல்லை! இது எப்படி உணவுக்குப் பயன்படும்? சர்வ நாசம்! இதற்காக ஜமீன்தார் உன்னை என்ன செய்யப் போகிறார் பார்."

விளைவு, அன்று இரவே அவளுடைய கரி அடுப்பு மண்ணோடு மண்ணாகிவிட்டது. பூங்கியின் வாழ்வாதாரம் முற்றிலுமாக அழிந்து போய்விட்டது.

பூங்கிக்கு இப்போது பிழைப்புக்கு வழியே இல்லை. அடுப்பு அழிக்கப்பட்டுவிட்டதால் கிராம மக்களும் பெருமளவு பாதிக்கப்பட்டனர். பல வீடுகளில் நண்பகல் வேளையில்கூட வேக வைத்த தானியங்கள் இல்லை. மக்கள் ஜமீன்தாரிடம் சென்று, "கிழவியின் அடுப்பை மீண்டும் நிர்மாணித்து மீண்டும் நெருப்பெரிய உத்தரவு கொடுங்கள்" என்று கேட்டார்கள். ஆனால், அவர் அதைக் காது கொடுத்தே கேட்கவில்லை. தோல்வியை ஒப்புக்கொள்ள அவர் விரும்பவில்லை.

அவள் மீது அக்கறை கொண்ட சிலர் வேறொரு கிராமத்திற்குச் சென்றுவிடுமாறு அவளை வற்புறுத்தினர். ஆனால், அவளுடைய இதயம் இந்தப் பரிந்துரையை ஏற்கவில்லை. அவள் தன் ஐம்பது வருடங்களை இந்த கிராமத்தில்தான் கழித்திருக்கிறாள். இந்தக் கிராமத்தின் ஒவ்வொரு மரத்திலும் இருந்த ஒவ்வொரு இலையையும் அவள் விரும்பினாள். இங்குதான் அவள் வாழ்வின் இன்பங்களும் துன்பங்களும் நடந்தேறின. தன் அந்திமக் காலத்தில் அவளால் அந்தக் கிராமத்தை கைவிட்டுவிட முடியவில்லை. அங்கிருந்து போகவேண்டும் என்ற எண்ணமே அவளை வருத்தியது. மற்றொரு இடத்தில கிடைக்கக்கூடிய மகிழ்ச்சியைவிட இந்தக் கிராமத்தில் கிடைக்கும் சோகத்தையே அவள் விரும்பினாள்.

இந்தச் சம்பவம் நடந்து ஒரு மாதத்திற்குப் பிறகு ஒரு நாள் அதிகாலையில் ஜமீன்தார் உதய்பன், தன்னுடன் சில வேலையாட்களை அழைத்துக்கொண்டு வாடகை வசூலிக்கச் சென்றார். அப்போது அவர் மூதாட்டியின் அடுப்பு இருந்த இடத்தின் பக்கம் பார்வையை வீசியதும் கடும் கோபம் கொண்டார். ஏன் என்றால் பூங்கி களிமண் உருண்டைகளால் அதை மீண்டும் உற்சாகமாகக் கட்டியெழுப்பிக் கொன்டிருந்தாள். இரவில் இந்த வேலையைத் தொடங்கியவள் சூரியன் உச்சிக்கு வரும் முன்பாக அதைக் கட்டி முடிக்க விரும்பியிருக்க வேண்டும். ஜமீன்தாரின் விருப்பத்திற்கு மாறாக நடக்கிறோம் என்பதை

அவள் அறிந்திருந்தாலும், அவர் அந்த விஷயத்தையே மறந்திருப்பார், அவருடைய கோபமும் குறைந்திருக்கும் என்று நம்பினாள். ஆனால், அவளொரு பாவப்பட்ட ஆன்மா! வயது வளர்ந்த அளவுக்கு அவளுக்கு மூளை வளர்ச்சி இல்லை,

ஜமீன்தார், "இதற்கு யார் அனுமதி தந்தது?" என்றார்.

திகைத்துப் போன பூங்கி, தன் எதிரே ஜமீன்தார் நிற்பதை அப்போதுதான் பார்த்தாள்.

"இந்த அடுப்பு யாருடைய ஆணைப்படி கட்டப்படுகிறது?" என்று மீண்டும் ஒருமுறை கேட்டார்.

ஒரு வேகத்தில் அவள், "எல்லோரும் நான் இதைக் கட்டவேண்டும் என்று சொன்னதால்தான் நான் இதை மீண்டும் கட்டுகிறேன்" என்றாள்.

"நான் அதை மீண்டும் அடித்து நொறுக்குவேன்" என்று சொல்லிக்கொண்டே அவர் அதை எட்டி உதைத்தார். ஈரமான களிமண் குவியலாக அப்படியே சரிந்தது. அவர் மீண்டும் தொட்டியை உதைத்தார். ஆனால், அவள் ஓடிப் போய் அதன் எதிரே நின்றுகொண்டு அந்த உதையைத் தான் வாங்கிக்கொண்டாள். பிறகு தன் விலா எலும்பைத் தடவியபடி, "மகராஜ், நீங்கள் யாருக்கு பயப்படவில்லை என்றாலும் கடவுளுக்கு நிச்சயமாக பயப்படவேண்டும். என் வாழ்க்கையை இப்படி நாசம் செய்வதால் உங்களுக்கு என்ன பயன் கிடைக்கப் போகிறது? இந்த சிறு துண்டு நிலத்தில் என்ன தங்கமா விளையப் போகிறது? உங்கள் நல்லதற்காகச் சொல்கிறேன், ஏழைகளைத் துன்புறுத்தாதீர்கள். என் மரணத்திற்குக் காரணமாக இருக்காதீர்கள்" என்றாள்.

"இனி நீ இங்கே எந்த அடுப்பும் கட்டப் போவதில்லை."

"அப்படியென்றால் என் சாப்பாட்டிற்கு என்ன செய்வது?"

"உன் வயிற்றுக்கு நான் பொறுப்பு கிடையாது."

"ஆனால், நான் உங்களுடைய வேலைகளைத் தவிர வேறு எதுவும் செய்யாவிட்டால், நான் உணவுக்கு எங்கே போவேன்?"

"நீ கிராமத்தில் இருக்கவேண்டும் என்றால் என் வேலைகளைச் செய்துதானாக வேண்டும்."

"நான் இந்த அடுப்பைக் கட்டி முடித்ததும் அவற்றைச் செய்வேன். கிராமத்தில் வசிக்க வேண்டும் என்பதற்காக உங்கள் வேலையை மட்டுமே என்னால் செய்துகொண்டிருக்க முடியாது."

"அப்படியானால் நீ எதுவும் செய்யவேண்டாம். உடனே கிராமத்தைவிட்டு வெளியேறு."

"என்னால் எப்படி இங்கிருந்து போகமுடியும்! என் காலம் முழுதும் நான் இந்தக் குடிசையில்தான் கழித்தேன். என் மாமியார், என் மாமியாரின் தாத்தா, பாட்டி என அனைவருமே இதே குடிசையில்தான் வாழ்ந்தனர். மரணத்தின் அரசனான யமனைத் தவிர, என்னை யாரும் இங்கிருந்து வெளியேற கட்டாயப்படுத்தமாட்டார்கள்."

ஜமீன்தார் உதய்பன், "அருமை! இப்போது நீ வேதத்தை மேற்கோள் காட்டுமளவுக்குப் போய்விட்டாயா! நீ கடினமாக உழைத்து நான் அனுப்பிய மொத்த தானியங்களையும் வறுத்துத் தந்திருந்தால் ஒரு வேளை, நான் உன்னைத் தங்க அனுமதித்திருப்பேன். ஆனால், இனி உன்னை இங்கிருந்து வெளியேற்றாமல் நான் ஓயமாட்டேன்" என்றவர் தனது பணியாளரிடம், "நீ போய் குவியலாக நிறைய சருகுகளை எடுத்து வா. மொத்தத்திற்கும் தீ வை; ஒரு அடுப்பை எப்படி உருவாக்குவது என்று இவளுக்குக் காண்பிப்போம்" என்றார்.

அவ்வளவு தான். ஒரு நொடியில் அங்கு மிகப்பெரிய ஓசை கேட்டது. கங்குகள் வான் நோக்கிப் பாய்ந்தன. அனைத்து திசைகளிலும் தீ பரவியது. கும்பல் கும்பலாக வந்த கிராம மக்கள் தழற் குன்றெனக் காட்சி அளித்த நெருப்பைச் சுற்றிலும் நின்று வேடிக்கை பார்த்தனர். செய்வதறியாதவளாக பூங்கி அந்தப் பெரும் தீயைப் பார்த்தபடி நின்றாள். பிறகு திடீரென்று ஒரே தாவலில், அவள் அந்த நெருப்பினுள் பாய்ந்தாள். ஓடி வந்த யாருக்குமே நெருப்பின் வாய்க்குள் தலையை நுழைக்கும் தைரியம் இல்லை. தளர்ந்து போயிருந்த அந்த உடலை சில நொடிகளிலேயே நெருப்பு முழுவதுமாக தின்று தீர்த்தது.

அதே தருணத்தில் காற்று பெரும் வேகத்துடன் வீசியது. விடுதலையுற்ற தீப்பிழம்புகள் கிழக்கு நோக்கி எரிய ஆரம்பித்தன. அடுப்புக்கு அருகில் இருந்த சில விவசாயிகளின் குடிசைகளைத் தீப்பிழம்புகள் சூழ்ந்தன. இரை கிடைத்த ஆர்வத்தில் தீ மேலும் பரவிப் பயணித்தது. அதன் பாதையில் இடறிய ஜமீன்தாரின் களஞ்சியத்தின் மீது பாய்ந்தது. இப்போது பீதியுற்ற முழு கிராமமும் தீயை அணைக்க ஒன்றுசேர ஆரம்பித்தது. ஆனால், அவர்கள் ஊற்றிய தண்ணீர் எண்ணையைப் போலச் செயல்பட்டதில் தீப்பிழம்புகள் இன்னும் பூதாகாரமாக எழுந்தன.

ஜமீன்தார் உதய்பனின் அற்புதமான மாளிகையை நெருப்பு வாயிலிட்டு விழுங்கியது; அவர் கண்ணெதிரேயே அது ஒரு கப்பலைப் போல் தூக்கி வீசப்பட்டு, தழல் அலைகளுக்கு நடுவே, தீக் கடலுள் மறைந்தது. சாம்பலில் இருந்து எழுந்த அவல ஓலம் பூங்கியின் அழுகையை விடப் பரிதாபமானதாக இருந்தது. ●

# சொல்வேந்தர் ஔவை ஒரு தமிழ்த் தவசி

**சந்தியா நடராஜன்**

ஔவை சொல் கேளீர் - ஔவை அருள்; வெளியீடு: ஸ்ரீராம் பாரதி கலை இலக்கியக் கழகம், 12/6 போயஸ் சாலை, தேனாம்பேட்டை, சென்னை - 600 018; தொலைபேசி: +91 44 4341 8700

ஆத்திசூடியுடன் ஆரம்பக் கல்வி தொடங்கியபோது அறிமுகமான பெயர் ஔவை; ஔவை பாட்டி. அரிச்சுவடி புத்தகத்தில் 'ஔ' என்ற எழுத்துக்குப் பக்கத்தில் கோல் ஊன்றிக் குனிந்திருக்கும் மூதாட்டியின் படம் போட்டு ஔவை என்று அச்சிடப்பட்டிருக்கும். 'அதியமான் அவையின் அழகிய பெண் அவள்; பெறலரும் நெல்லிக்கனி பெற்ற பெருமைக்குரியவள்' என்று தெரிந்துகொண்டது பள்ளிப் பருவத்தில். கல்லூரியில் காலடி எடுத்து வைத்தபோதுதான் 'ஔவை' ஒருத்தி இல்லை, பல பேர் அப்பெயரில் இருந்தார்கள்' என்ற பேச்சும் எழுத்தும் பழக்கப்பட்டது.

சென்னைக்கு வந்த பிறகு இன்னொரு ஔவையை இலக்கியக் காற்று சுமந்துவந்து இதயத்தில் இறக்கிவிட்டுச் சென்றது. அவர்தான் உரைவேந்தரின் மகன், சொல்வேந்தர் ஔவை நடராஜன்.

வள்ளலாரின் அருட்பாக்களைக் கருத்தூன்றி மனம் ஒன்றிக் கற்கத் தொடங்கியபோதும் 'ஔவை'யின் தந்தை துரைசாமி பிள்ளையின் உரையே ஒளிவிளக்காய் வெளிச்சம் தந்தது. குறிப்பாக வள்ளல் பெருமானின் மூன்றாம் திருமுறையில் திருவடிப் புகழ்ச்சி(1960) இல் 'பரமசிவம் சின்மயம் பூரணஞ் சிவயோக பாக்கியம் பரம நிதியம்' என்று தொடங்கும் பாடலிலிருந்து ஏறக்குறைய பத்துப் பாடல்கள் வரை சமஸ்கிருத சொற்களையே கையாண்டிருப்பார் வள்ளலார். அதுலம், அதுலிதம், அம்பராம்பரம், நிராலம்பனம், பாவனாதீதம், குணாதீதம், உபசாந்த பத மகா மௌன ரூபம் என்ற வகையில் எல்லாம் வடமொழி தத்துவ இயல் சார்ந்த கலைச் சொற்கள்தான். இந்தப் பகுதியை எந்தவொரு தமிழாசிரியரும் எந்தவொரு தமிழ் ஆய்வாளரும் அண்ணாமலை பல்கலைக் கழகம் வெளியிட்டுள்ள ஔவை துரைசாமி பிள்ளையின் அருட்பா உரை நூலின் துணையின்றி கற்றுத் தெளிந்து கரையேற இயலாது. அருட்பாவின் ஆழம் அறிந்து தெளிவு பெற எனக்கு ஆசானாக வந்து அமர்ந்தார் உரைவேந்தர் ஔவை.



சமீபத்தில் சென்னை சாகித்ய அகாதெமி அலுவலகத்தில் நடந்த ஒரு நிகழ்வில் முதன்முறையாக தமிழ் வளர்ச்சித்துறை இயக்குநரான சொல்வேந்தர் ஔவையின் மகனார் அருளுடன் அறிமுகம் பெற்றேன். அப்போது அவர் சொன்னார்: "'அம்ருதா', 'காலச்சுவடு', 'உங்கள் நூலகம்' ஆகிய மூன்று இலக்கிய இதழ்களையும் அப்பா தவறாமல் படித்து வருகிறார். குறிப்பாக நீங்கள் 'அம்ருதா'வில் எழுதி வரும் கட்டுரைகளைப் படித்து ரசித்து என்னையும் படிக்கச் சொல்கிறார்". எதிரும் புதிருமாக இருந்த மூன்று தமிழக முதல்வர்கள் தயக்கமின்றிக் கொண்டாடிய தமிழ்மகன் நம்மையும் ஒரு பொருளாக மதித்திருக்கிறார் என்ற எண்ணம் மனத்தில் மகிழ்ச்சிப் பேரலைகளை உருவாக்கிக் கொண்டிருந்தது. எப்படியாவது அவரை நேரில் சந்திக்க வேண்டும் என்ற ஆசை நிறைவேறவில்லை. 2022 நவம்பர் 21ஆம் நாள் பேசிக்கொண்டே இருந்த ஔவையார் நிறைந்த மௌனியானார்.

தந்தையின் மறைவுக்குப்பின் கடந்த சில ஆண்டுகளில் ஆவர் ஆற்றிய உரைகளைக் கட்டுரை வடிவத்தில் தொகுத்து, "ஔவை சொல் கேளீர்" என்ற நூலாகக் கொண்டு வந்திருக்கிறார் ஔவை அருள். இந்த நூலை ஸ்ரீராம்

பாரதி கலை இலக்கியக் கழகம் விலையில்லாப் பதிப்பாக மகாகவி பாரதியின் 141ஆம் பிறந்தநாள் விழாவில் (25.02.2023) வெளியிட்டிருக்கிறது. அவரது நினைவைப் போற்றும் வகையில் உடனடியாகவும் உரிய நேரத்திலும் கொண்டு வந்திருக்கிற இந்நூலைப் படிக்கிறபோது டாக்டர் ஔவை நடராஜன் ஆற்றிய உரைகள் அனைத்தையும் தொகுத்துக் கொடுத்தால் கிடைக்கக்கூடிய வாசிப்பனுபவத்தையும் வளமான தமிழிலக்கியச் செல்வத்தையும் எண்ணி எண்ணி மனம் அலைபாய்ந்தபடியே இருக்கிறது.

'ஔவை சொல் கேளீர்' நூலில் 'ஔவை'யார் ஆற்றிய வரவேற்புரைகளும் வாழ்த்துரைகளும் தொலைக்காட்சி உரைகளும் ஆங்கிலத்தில் ஆற்றிய பட்டமளிப்பு விழா பேருரைகளும் இடம் பெற்றுள்ளன. ஒரு சில கட்டுரைகளைத் தவிர ஏனையவை அளவில் சிறியவை. அளவில் சிறிதோ பெரிதோ எல்லாப் பக்கங்களிலும் 'ஔவை முத்திரை' தென்படாமல் இல்லை.

இக்கட்டுரைகள் எழுதப்பட்டவை அல்ல; பேசப்பட்டவை. அதனால் இவற்றைப் படிக்கும்போது நமது செவியில் ஔவையின் குரலைக் கேட்க முடியும்; மேல் பொத்தான் போடாத சட்டையுடன் இலகுவாக ஆற்றும் உரையழகோடு அவரது உடல் மொழியழகும் நம் மனத்தில் வந்து தோன்றும்.

ஓஷோவும் அதிகம் எழுதியதில்லை. அவரது உரைகள்தான் புத்தகங்களாயின. இருவருக்கும் ஓர் ஒற்றுமை உண்டு. கற்பாறையைக் கற்கண்டாய் மாற்றிக்காட்டும் நாவன்மை படைத்தவர்கள். ஓரிரு சொற்கள் போதும் அல்லது ஓரிரு வரிகள் போதும். தெள்ளத் தெளியும் சித்தம். சிந்தனையில் சுடர் ஒளி மிகும். சிறை பெறா நீர்போல் சிந்தை வாய் பாயும் அவர்தம் சீர்மிகு முடிபுகள்.

கம்பன் கழக முதலாண்டு விழா நிகழ்வில் டாக்டர் ஔவை நடராஜன் ஆற்றிய உரை ஒன்று இந்த நூலில் இடம்பெற்றுள்ளது. 'இராமாயணம் சமஸ்கிருதத்தின் ஆதி காவியம். கம்பராமாயணம் தமிழின் ஒப்புயர்வில்லாத நீதி காவியம்' என்று தொடங்குகிறார் தனது உரையை.

கம்பன் தனது காவியத்தை எதற்காக எழுதினான்? 'நடையின் நின்று உயர் நாயகன்' இராமனின் கதையை எழுத முயன்றது ஏன்? இக்கேள்விகளுக்கு ஒரு வரியில் விடை தருகிறார் ஔவை. "ஒழுக்கத்திலும் அடக்கத்திலும் உயர் பண்புகளிலும் உயர்ந்து நிற்கும் ஒருவன் கடவுளாக முடியும் என்பதைக் காட்டுவதே இராமாயணத்தின் சாரம்" என்கிறார்.

வேடன் குகனை, "இக்கரையாகிய இகத்திலிருந்து அக்கரையாகிய பரத்துக்கு நம்மைக் கரை சேர்க்கிற கடவுளையே கரை சேர்த்தவன்" என்று சொல்லி நம் மனத்தில் பதிய வைக்கிறார். தக்க தலைவனைப் போற்றி பின்பற்றினால் வானரமும் ஞானச் சுடராகும் என்று அனுமனைச் சுட்டுகிறார்.

'நெல்லும் உயிர் அன்று; நீரும் உயிர் அன்று / மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்' என்ற புறநானூறு காட்டும் முடியாட்சி சிந்தனையை மடைமாற்றி மக்களாட்சி சிந்தனைக்காகக் கனவு காணும் கம்பனை நம்முன் நிறுத்துகிறார்.

'உயிரெலாம் உறையுமோர் உடம்புமாயினான்' என்று தசரதனைக் குறிப்பிடுகிறார் கம்பர்.

'மன்னன் மாநிலத்தின் உயிர்' என்ற பழைய வழக்கத்தை மாற்றி ஏவல் இடுகின்ற உயிராக மக்களையும் ஏவல் புரிகின்ற உடம்பாக மன்னனையும் முன்வைக்கிறார் கம்பர்' என்று ஔவை சொல்லும் சொல் வெல்லும் சொல்தானே! பிறகு, 'அன்பு நெறியின் வடிவமே, ஒருமை உணர்ச்சியே இராமாயணம்' என்று தலைமையுரையை முடிக்கிறார். மேலும் கம்பன் கவித்திறத்தை ஆக்ஸ்போர்டு பல்கலைக்கழகத்தில் பிராட்லே ஆற்றிய உரைவீச்சின் வெளிச்சத்தில் ஆழ்த்தி நமது ஆர்வத்திற்கு எரிபொருள் தருகிறார்.

சென்னை விவேகானந்தர் கல்லூரியில் சைவ சித்தாந்தம் குறித்து உரை நிகழ்த்தியிருக்கிறார். குமரகுருபரரும் தாயுமானவரும் சைவத்தைப் புகழ்வதில் வியப்பில்லை என்று கூறி 'The Saiva Siddhanta philosophy is the choicest product of the Dravidian Intellect' என்ற ஜி.யு.போப்பின் சிந்தனையை முன்வைத்துப் பேசி மாற்றுச் சமய போதகரையும் ஈர்த்த சமயம் சைவம் என்று சொல்லாமல் சொல்கிறார் நமது இணைய கால ஔவை. சைவத்தின் கோட்பாடுகள் திருக்குறளுக்கு நிகரான பொதுமை உடையவை என்று நிறுவுகிறார்.

சைவ சித்தாந்தத்தில் பதி, பசு, பாசம் என்று கூறப்படும் முப்பொருள் உண்மையை விளக்க, தத்துவ சுழற்சிக்குள் கேட்போரைச் சிக்க விடாமல் குறள் பக்கம் சாய்ந்துகொள்கிறார். 'சார்பு உணர்ந்து சார்பு கெடல்' என்ற வள்ளுவ வாக்கால் விளக்கம் தருகிறார். 'சார்பு உணர்ந்து' என்பது செம்பொருட் சார்பு; சார்பு கெட என்பது, விட வேண்டிய சார்பு - காம, வெகுளி, மயக்கங்கள். உணர்ந்து பற்றிக்கொள்ள வேண்டியது பதி; விட வேண்டியது பாசம்.

ஒரு திருக்குறள் தொடர் மூலம் சைவத்தின் தத்துவத்திற்குத் தெள்ளிய விளக்கம் தரும் இவரின் ஆற்றலை என்னென்பது?

வள்ளலார் - காந்தியடிகள் விழாவில் ஆற்றிய வரவேற்புரையில் இருவர் குறித்தும் அவரது பார்வை எண்ணி மகிழத்தக்கது. 'அரசியலில் ஆன்மிகத்தைக் கவந்தவர் காந்தியடிகள்; அருளியலில் அரசியலைக் கவந்தவர் வள்ளல் பெருமான்' என்று இருவரையும் இணைத்துப் பேசி அவர்தம் மொழிக்கொள்கை குறித்தும் தீர்க்கமாகப் பேசுகிறார். வள்ளலார், காந்தியடிகள் இருவரும் தாய்மொழி மூலம் தொடக்கக் கல்வி வேண்டும் என்றார்கள். முதலில் தாய்மொழி,



பிறகு இந்தி என்றார் மகாத்மா. முதலில் தாய்மொழி, பிறகு சமஸ்கிருதம் என்றவர் வள்ளலார். இருவரும் ஆங்கிலத்தையும் ஏற்றனர். மும்மொழிக் கொள்கையில் இருவருக்கும் உடன்பாடு உண்டு.

இருபெரும் ஆளுமைகள் குறித்துப் பேசும்போது இருவரின் மனத்திட்பத்தை ஊடுருவி ஆய்ந்து, தயக்கமோ கலக்கமோ இன்றி எளிய சொற்களால் தமது முடிபுகளை நமது இதயத்தில் தைத்து உரமேற்றிச் செல்லும் இந்தத் தையல் நாயகனைச் சொல்வேந்தர் என்று அழைக்காமல் வேறு எப்படித்தான் அழைக்க முடியும்!

இன்னொரு கட்டுரையில் வீட்டில் அடுப்படியில் பூனை படுத்திருக்கிறது என்று தனது இழிநிலையை எடுத்தியம்பி பரிசில் பெற்று வரும் புலவன், பெற்ற செல்வத்தை, 'பிறருக்கு பகிர்ந்து அளி' என்று தன் துணைவியிடம் கூறும் பண்பை எடுத்துக்கூறி, புலவருக்கும் புரவலருக்கும் உள்ள மாட்சிமையுடைய உறவை விளக்குகிறார் 'ஔவை'யார். அப்போது பாண்கடன் என்ற தமிழ்ச் சொல்லுக்கு,'பொருட்திறம் உடையவர்கள் கலைத்திறம் உடையவர்களுக்கு வழங்குவது ஒரு கடமையாக இருந்திருக்கிறது' என்று விளக்கம் தருகிறார்.

பாரியின் மறைவுக்குப்பின் பாரி மகளிரை அழைத்துக்கொண்டு வேளிர் தலைவன் இருங்கோவேளிடம் சென்று அவர்களை மணம் செய்துகொள்ளுமாறு கூறும் கபிலரின் பாடலில் (புறம் 201) பயின்று வந்துள்ளது பாண்கடன் என்னும் சொல். 'ஆண்கடன் உடைமையின் பாண்கடன் ஆற்றிய' - இசைக்கலைஞரை ஆதரிப்பது ஆண்மகன் கடமை என்ற பொருள்படப் பேசுகிறார் கபிலர்.

புலை என்றாலே வெறுப்பு என்று பொருள். புலவி என்றால் மாறுபடுவது என்று பொருள். 'புலை, புலால், புலவு ஆகிய சொற்கள் யாவும் தமிழுக்கு இசைந்த சொற்கள் இல்லை. உண்ணப்படுவது ஊனே தவிர, ஊன் என்பது ஒருபோதும் உண்ணப்படுவது அன்று'

இப்படி ஒவ்வொரு கட்டுரையிலும் தீர்க்கமான வாசகங்களை இந்நூலில் காணமுடிகிறது.

பேச்சாற்றல் மொழிவளர்ச்சியுடன் சம்பந்தப்பட்டது. செல்வத்துள் செல்வம் செவிச்செல்வம் என்கிறது நம் தமிழ்மறை. நாவலர், நாவுக்கரசர் என்று பட்டம் சூட்டி, பெயரிட்டு மகிழ்ந்த இனம் நம் தமிழினம். அரசியல் மேடைப்

பேச்சாளருக்குக் கோடை இடி, சூறாவளி, புயல் என்றெல்லாம் அடைமொழிகள் அளித்து வருகிறோம். எல்லாத் தளங்களிலும் மேடைப் பேச்சில் மின்னியவர்கள் தமிழில் எத்தனை பேர்!

சிலம்புக்கு ம.பொ.சி.; வள்ளுவம் பேச முனுசாமி; சமயச் சொற்பொழிவுக்கு வாரியார், கி.வ.ஜ., கீரன், கிரிதாரி பிரசாத்; நவீன இலக்கிய உலகில் ஒரு ஜெயகாந்தன்; அரசியல் மேடையில் அண்ணா, கலைஞர், ஜீவா; காங்கிரசில் சின்ன அண்ணாமலை. இப்படி அடுக்கிக்கொண்டே போகலாம். வாழையடி வாழையென வந்த இந்த மரபில் எல்லாத் துறைகளிலும் தன்னை நிலைநிறுத்திக்கொண்ட நம் காலத்து நாயகனாகக் கண்ணெதிரே காட்சியளித்தவர் சொல்வேந்தர் டாக்டர் ஔவை நடராஜன் அவர்கள்தான்.




நவீன இலக்கிய உலகில் பேச்சுக்கலை வாடிய வற்றல் மரமாய் நிற்கிறது. இந்நிலை மொழி வளர்ச்சிக்கு உகந்தது ஆகாது. நாம் மீண்டும் மீண்டும் இந்த முன்னோடிகளின் உரைகளைக் கேட்க முடிந்தால், கேட்டுப் பயனுற வேண்டும். இல்லாவிட்டால் படித்து இன்புற வேண்டும்.

தமிழ் சோறு போடுமா? என்று கேட்பவர்களுக்கு, 'தமிழ் அரச பதவி அளிக்கும்; பல்கலைக்கு வேந்தராக்கும்; பத்மஸ்ரீ பெற்றுத்தரும்' என்பதற்கான நேரடி சாட்சியாக ஒளிரும் ஔவையின் வாழ்க்கையே முழுமையான பதில்.

ஔவை தமிழக அரசின் மொழிபெயர்ப்புத் துறை இயக்குநராகப் பணியாற்றியிருக்கிறார். அவரது ஆங்கில அறிவுக்கும் மொழிபெயர்ப்புத் திறனுக்கும் ஒரு நிகழ்வைச் சுட்டுகிறார் சுகி சிவம் ஒரு காணொளி உரையில்.

எம்ஜிஆர் பெற்ற ஒரு விருதுக்காக மத்திய அமைச்சர் ஒருவர் பாராட்டிப் பேசும்போது அந்த விருது 'a feather in his cap' என்று குறிப்பிட்டிருக்கிறார். அதை ஒரு கணம் கூடத் தாமதிக்காமல் ஔவை எப்படி மொழிபெயர்த்தாராம் தெரியுமா? 'இந்த விருது மன்னாதி மன்னன் மணிமகுடத்தில் மற்றுமொரு மாணிக்கக் கல்' என்று மொழிபெயர்த்திருக்கிறார். இதைக் கேட்டு விருது பெற்ற மன்னாதி மன்னன் எப்படி நெகிழ்ந்து போயிருப்பார்!

'ஔவை சொல் கேளீர்' நூலில் ஔவை ஆற்றிய மூன்று ஆங்கில உரைகள் இடம்பெற்றுள்ளன. அவை அனைத்தும் படித்துப் போற்றத் தக்கவை.

எதிரும் புதிருமான மூன்று தமிழக முதல்வர்களிடமும் பணியாற்றிய ஔவைக்கு ஆட்சி மாற்றங்களால் எவ்வித சிரமமோ சிராய்ப்போ ஏற்பட்டதில்லை. மாறாக அவர் மனமறிந்த முதல்வர்களாகவே அவர்கள் இருந்தார்கள். ஒருவரை ஒருவர் விஞ்சி அவருக்குச் சிறப்புச் செய்தனர். எல்லாவற்றுக்கும் ஔவையிடமிருந்தது வேறொன்றுமில்லை, தமிழ் மட்டுமே.

இன்முகமும் இணக்கமும் இலகுவான வாழ்க்கைமுறையும் அவரது வெற்றிக்கான காரணிகளாக அமைந்தன. தமிழ்ப் பேச்சை உயிர் மூச்சாய்க் கொண்டு வாழ்ந்த அவருக்கு உடல் நலிந்த நிலையிலும் நாவன்மை குறையவில்லை. படிப்பதும் பேசுவதும் தெளிந்து சொல்வதும் தமது வாழ்வியல் அறமென நேர்ந்துகொண்டவர். அதை இன்பம் பொங்க இடைவிடாது செய்துவந்தார்.

'தவம் செய்வார் தம் கருமம் செய்வார்' என்கிறார் வள்ளுவர். இவருக்குத் தமிழ்தான் கருமம். அதனால் இவர் ஒரு தமிழ்த்தவசி.

சந்தியா நடராஜன்
**<sandhyapathippagam@gmail.com>**

**முயங்கொலிக் குறிப்புகள் - ஒரு கடிதம்**

சமீபகாலமாகவே நான் `முயங்கொலிக் குறிப்புகள்' போலொரு இதயத்துக்கு நெருக்கமான கவிதைகளைப் படித்ததில்லை. இத்தகைய அபூர்வ கவிதைகளைப் பன்னுவதற்கு ஒரு பெண்ணாலேயே முடியும். படுக்கையறையின் இயலாமை / தாம்பத்தியத்தின் புரிதல்களைப் பகரும் கவிதை வரிகள் அபாரமானவை.

`அம்மா கைருசி உனக்கு வரவே இல்லை' என்பது புறவயமான பிரச்சனை. புரிதல் சம்பந்தப்பட்ட விஷயம். அது முயங்கல் / தாம்பத்தியம் சம்பந்தமானதல்ல, அவ் வரிகளை நீக்கி வேறொரு கவிதையாகப் பண்ணியிருக்கலாம் என்பது என் அபிப்பிராயம்.

அதேபோல் திருவிழா தெரியாதவள், சிறுமியாக இருந்தபோது தெருவின் மற்றப் பையன்களுடன் சேர்ந்து விளையாட அனுமதிக்கப்படாமை, முதுகலை பயில நகரத்துக்குக் கல்லூரிக்குச் செல்ல அனுமதிக்கப்படாததையும் சொல்லலாம். அவற்றைத் தனியாக பிறிதொரு கவிதையாக எழுதியிருக்கலாம்.

மீதித் தொடரையும் சுவைக்க காத்திருக்கிறேன்.

பொ. கருணாகரமூர்த்தி, பேர்லின், ஜேர்மனி

# அம்ருதா பதிப்பக வெளியீடுகள்



₹ 110




₹ 80



₹120

காலந்தோறும் அறம்



₹ 60

அறிஞர் அண்ணா
சிறுகதைகள்



₹100




₹ 100



₹ 750




₹ 100




₹ 150


**அம்ருதா**

#1 கோவிந்த ராயல் நெஸ்ட் அடுக்ககம், 12 மூன்றாவது முக்கிய சாலை 2ஆம் விரிவாக்கம்,
சி. ஐ. டி நகர்-கிழக்கு, நந்தனம், சென்னை-600035
தொலைபேசி: 94440 70000, 044 2435 3555.
மின்னஞ்சல்: info.amrudha@gmail. com. இணையதளம்: www. amruthamagazine. com

# அதிகரிக்கும் வேலை நேரம் உழைப்பே வாழ்வாகும் அபாயம்

பிரபு திலக்

நிலக்கரிச் சுரங்கங்களிலும் இரும்பு உருக்காலைகளிலும் பஞ்சாலைகளிலும் ஆண்கள் மட்டுமல்ல குழந்தைகள், பெண்கள், முதியோர்கள் என பாகுபாடின்றி அனைத்து தொழிலாளர்களும் 18 முதல் 20 மணி நேரம் கடுமையாக வேலை வாங்கப்பட்ட ஒரு காலம் இருந்தது. ஓய்வின்றி, உற்பத்தியில் நிகழும் சிறு தாமதத்திற்கும் தண்டனை பெற்று, வழங்கப்பட்ட சொற்ப ஊதியமும் பிடிக்கப்பட்டு கொடுமையின் உச்சகட்ட நிலை யிலிருந்தார்கள் அன்றையத் தொழிலாளர்கள். இக்கொடுமையை எதிர்த்து, வெகுண்டெழுந்த தொழிலாளர்கள் போராடினார்கள். அப்படி போராடியவர்கள் மீது, 4 மே 1886ல் ஹேமார்க்கெட் எனும்இடத்தில் ஏவப்பட்ட கொடுந்தாக்குதலில் பலர் கொல்லப்பட்டார்கள். தொடர்ந்த விசாரணையில் பலர் தூக்கிலிடப்பட்டார்கள், பலருக்கு சிறைத் தண்டனை. ஆனாலும் போராட்டம் தொடர்ந்தது. அதன் விளைவாக, அன்றையத் தொழிலாளர்களின் இந்த தியாகத்தால் கிடைத்ததுதான் இன்று பெரும்பான்மை தொழிலாளர்கள் அனுபவிக்கும் 8 மணி நேரம் வேலை, 8 மணி நேரம் ஓய்வு, 8 மணி நேரம் குடும்பத்துக்கு எனும் வரையறை.

தொழிலாளர்களின் உரிமையைப் பாதுகாக்கும் இந்த நடைமுறை உலகம் முழுவதும் 70க்கும் மேற்பட்ட நாடுகளால் அங்கீகரிக்கப்பட்டு கடைபிடிக்கப்படுகிறது. இந்தியாவில் சுதந்திரம் பெறுவதற்கு முன்னரே தொழிலாளர் நலச் சட்டங்கள் உருவாக ஆரம்பித்துவிட்டன. இந்தியாவில் தொழிலாளர் வேலைநேரத்தை 14 மணியில் இருந்து 8 மணி நேரமாக மாற்றியவர் அப்போது வைசிராய் கவுன்சிலில் உறுப்பினராக இருந்த அம்பேத்கர். இன்றிருக்கும் பல இந்தியதொழிலாளர் நலச்சட்டங்களுக்குவித்திட்டவர் அவரே. தொழிலாளர்கள் வேலை நேரத்தை 8 மணி நேரமாக மாற்றியதை கொண்டாடும்விதமாக இந்தியாவில், முதன்முதலில் தமிழ்நாட்டில்தான் மே தினம் சிங்காரவேலரால் 1923ஆம் ஆண்டு கொண்டாடப்பட்டது. இந்தியாவிலேயே முதன்முதலாக மேதினத்திற்கு அரசு விடுமுறை, தமிழ்நாட்டில்தான் 1967இல் அன்றைய முதலமைச்சர் அண்ணாவால் அறிவிக்கப்பட்டது. அன்றிலிருந்து 23 ஆண்டுகளுக்கு பின்னர்தான் மே தினத்திற்கு, 1990இல் வி.பி. சிங் தலைமையிலான ஒன்றிய அரசு விடுமுறை அறிவித்தது குறிப்பிடத்தக்கது.



வேலை, குடும்பம், ஓய்வு ஒவ்வொன்றுக்கும் 8 மணி என்ற இந்த நேரப் பங்கீடு நம் நவீன குடும்ப மற்றும் சமூக இயக்கத்தில் நெடுங்காலமாக ஒருசமநிலையை உருவாக்கிவைத்திருக்கிறது. கிட்டத்தட்ட 75 வருடங்களாக இந்த சமநிலை மாறாமல் நல்லபடியாக இயங்கி வருகிறது. இந்நிலையில் இந்த சமநிலையை குலைத்து, தொழிலாளர்களின் உரிமைகளை 1886ஆம் ஆண்டிற்கும் பின்னால் கொண்டு செல்லும் நிலை இந்தியாவில் இன்று உருவாகியிருக்கிறது.

தனியார் நிறுவனங்களில் வேலை நேரத்தை 8 மணி நேரத்திலிருந்து 12 மணி நேரமாக உயர்த்துவது தொடர்பான சட்ட மசோதா தமிழ்நாடு சட்டப்பேரவையில் 21.04.23 அன்று எதிர்க்கட்சிகள் மட்டுமல்லாமல் ஆளும் திமுக கூட்டணி கட்சிகளான காங்கிரஸ், இந்திய கம்யூனிஸ்ட், மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட், மதிமுக, விசிக உள்ளிட்ட கட்சிகளின் எதிர்ப்பையும் மீறி நிறைவேற்றப்பட்டுள்ளது.

அமைச்சர் தங்கம் தென்னரசு, இந்த மசோதா தொடர்பாக, “இன்றைய உலகளாவிய சூழ்நிலையில் புதிய முதலீடுகளுடன் இந்தியாவிற்கும் தமிழ்நாட்டிற்கும் வருகின்ற நிறுவனங்கள் நம்முடைய வேலை நேரத்தில் ஒரு நெகிழ்வுத்தன்மை இருக்க வேண்டும் என்று எதிர்பார்க்கின்றன. இந்த நெகிழ்வுத்தன்மையின் மூலமாக புதிய வேலைவாய்ப்புகள் உருவாகும். குறிப்பாக, பெண்களுக்கு அதிகமாக வேலைவாய்ப்புகள் உருவாகக் கூடிய ஒரு வாய்ப்பு இருக்கிறது.

அனைத்து நிறுவனங்களுக்கும் இது பொருத்தமானது அல்ல. மின்னணுவியல் (Electronics), தோல் அல்லாத காலணிகள் உற்பத்திச் செய்யக்கூடிய தொழில்கள் (Non leather shoe making), மென்பொருள் (Software) போன்ற குறிப்பிட்ட சில நிறுவனங்களுக்கு மட்டுமே இந்த விதிகள் பொருந்தக்கூடியது. இவர்களுக்காகவே இந்த சட்டம் கொண்டுவரப்பட்டுள்ளது” என்று தெரிவித்தார்.

தொழிலாளர் நலன் மற்றும் திறன் மேம்பாட்டுத் துறை அமைச்சர் கணேசன், “வாரத்திற்கு 48 மணி நேரம் வேலை என்பதில் மாற்றமில்லை. இந்த நேரத்தை 12 மணி நேரம் வீதம் 4 நாட்களில் முடித்துவிட்ட பிறகு 5வது நாளாக தொழிலாளர் வேலை செய்ய விரும்பினால், அவர்களுக்கு சம்பளம் வழங்கும் வகையில் சட்டம் உள்ளது” என்று தெரிவித்துள்ளார்.

“யார் மீதும் திணிக்கப்படாது; விரும்பியவர்கள் செய்யலாம்” என்று அமைச்சர்கள் தெரிவித்தாலும் விசிக, சிபிஎம், சிபிஐ உள்ளிட்ட திமுக கூட்டணி கட்சிகளே, “இந்த சட்ட திருத்தம் உழைப்புச் சுரண்டலுக்கு வழிவகுக்கும்” என்று விமர்சித்துள்ளன.

தொழிலாளர்கள் விரும்பினால் 12 மணி நேரம் வேலைப் பார்க்கலாம் என்று சொல்லப்பட்டாலும், ‘விருப்பமில்லை’ என்ற நிலையை தேர்வு செய்யும் உரிமை ஒரு தொழிலாளிக்கு இருக்கிறதா, அப்படி தேர்வு செய்தால் அவரை நிறுவனம் பணியில் வைத்துக்கொள்ளுமா? என்னதான் தன்விருப்பம் என்று கூறினாலும். 12 மணி நேர வேலை இறுதியில் கட்டாயமானதாகவே மாறிவிடும். இதுபோல், சில தொழில்களுக்கு எனத் தொடங்கி அனைத்துத் தொழில்களுக்கும் என ஆகும் என்பதிலும் சந்தேகம் வேண்டாம்.

இப்போது 12 மணி நேர வேலை திட்டத்துக்கு எதிராக முன்வைக்கப்படும் மேலே குறிப்பிட்ட வாதங்கள் எல்லாம் அரசுக்கும் முதலமைச்சருக்கும் அமைச்சர்களுக்கும் தெரியாதவைகள் அல்ல. சில வருடங்களுக்குமுன்னர் அவர்களே சொன்னவைதான் இவையெல்லாம்.

கடந்த 2020ஆம் ஆண்டின் தொடக்கத்தில் கொரோனா தொற்று இந்தியாவில் வேகமாக பரவியதால் முழு ஊரடங்கு பிறப்பிக்கப்பட்டது. தொழிற்சாலைகள், நிறுவனங்கள் போன்றவை மூடப்பட்டன. புலம்பெயர்ந்த தொழிலாளர்கள் அவரவர் சொந்த ஊர்களுக்கு சென்றதால் தொழில் நிறுவனங்கள் பாதிப்பை சந்தித்தன. இதனையடுத்து, 2020 மே 6ஆம் தேதி தொழில் நிறுவனங்களுடன் அப்போதைய ஒன்றிய தொழிலாளர் மற்றும் வேலைவாய்ப்புத் துறை அமைச்சர் சந்தோஷ் கங்வார் பேச்சுவார்த்தை நடத்தினார். அன்று தொழில் நிறுவனங்களின் பிரதிநிதிகள் 12 கோரிக்கைகளை அரசிடம் முன்வைத்தனர். அந்த கோரிக்கைகளில், தொழிலாளர்கள் வேலை நேரத்தை 12 மணி நேரமாக அதிகரிக்க வேண்டும் என்பதும் இடம்பெற்றிருந்தது. அதற்கு முன்பாகவே ராஜஸ்தான், குஜராத், பஞ்சாப், இமாச்சல் பிரதேசம், உத்தரப் பிரதேசம் போன்ற மாநிலங்கள் வேலை செய்யும் நேரத்தை நீடிப்பது தொடர்பாக அறிவிப்புகளை வெளியிட்டிருந்தன.

கொரோனா பொது முடக்கம் விலக்கிக் கொள்ளப்பட்ட பின்னர், பொருளாதார செயல்பாடுகளை முன்னெடுக்கவும் புதிய முதலீட்டாளர்களை ஈர்க்கவும் தொழிலாளர் சட்டங்களில் திருத்தம் செய்ய ஒன்றிய அரசு திட்டமிட்டது. அதன்படி, தொழிலாளர்கள் தினமும் 12 மணி நேரம் என வாரத்திற்கு அதிகப்பட்சமாக 72 மணி நேரம் (6 நாட்கள்) வேலை செய்யும் வகையில் திருத்தம் மேற்கொண்டு, புதிய தொழிலாளர் சட்ட விதிகளை கடந்த 2022 ஜூலை 1ஆம் தேதி அமல்படுத்தவுள்ளதாக தகவலை கசியவிட்டது. எனினும், பலத்த எதிர்ப்புகள் காரணமாகவும் பல மாநிலங்கள் அதற்கு தேவையான விதிகளை வகுக்காததாலும் அது தற்போதுவரை அமல்படுத்தப்படாமல் உள்ளது.

கொரோனாவுக்கு முன்னர் வரை சீனாதான் ஒட்டுமொத்த உலகத்தின் தொழிற்சாலையாக விளங்கியது. குறைந்த ஊதியம், நீண்ட வேலை நேரம், இலகுவான சூழியல் சட்டதிட்டங்கள் என்று குறைந்தவிலை உற்பத்திக்கு கவர்ச்சிகரமான ஒரு நாடாக திகழ்ந்தது. கொரோனாவில் சீனா முடங்கியதும் உலகமே முடங்கியது. பல நாடுகளில் கழிவறை தாளுக்குக்கூட பெரும் தட்டுப்பாடு ஏற்பட்டது. கம்ப்யூட்டர் சிப், மருத்துவ உபகரணங்கள் உட்பட எல்லா பொருட்களுக்கும் இதே நிலமைதான். காரணம் இவை எல்லாவற்றையுமே சீனா தான் அனுப்பி கொண்டிருந்தது. பன்னாட்டு நிறுவனங்கள்

சீனாவை மட்டுமே நம்பி இருக்கும் நிலையை கொரோனா கேள்விக்கு உள்ளாக்கியது. இதற்கு சீனாவின் அரசியல் நிலைபாடுகளும் வலுசேர்த்தது.

எனவே, பல பன்னாட்டு நிறுவனங்கள், தங்களது உற்பத்தி திறனில் ஒரு பகுதியை இந்தியா போன்ற நாடுகளுக்கு மாற்றிவிட நினைக்கிறார்கள். அதேநேரம், அவர்கள் இந்தியாவுக்குள் வர சீனா போலவே தொழிற்சாலை தொடர்பான சட்டங்களை இந்தியா இலகுவாக்க வேண்டும் என்று எதிர்பார்க்கிறார்கள். அதில் ஒன்றுதான் இந்த இந்த 12 மணி வேலை நேர மாற்றத்துக்கான அழுத்தம். ஒன்றிய அரசும் பல மாநில அரசுகளும் 12 மணி நேர வேலைத்திட்டத்துக்கு மாற இந்த அழுத்தமே காரணம். பிற மாநிலங்கள் பன்னாட்டு முதலீட்டை பெற மாற்றங்களை செய்யும் போது தமிழ்நாடு மட்டும் விலகி நின்றால் புதிய தொழில் முதலீடுகளை இழக்கும் சூழல் உருவாகும் என்றுதான் தமிழ்நாடு அரசும் வேலை நேரத்தில் சட்டதிருத்தம் கொண்டுவந்து இந்த பந்தயத்தில் ஓட எத்தனிக்கிறது.

ஆனால், இந்த 12 மணி நேர வேலை என்ற முன்மொழிவை முதலில் ஒன்றிய அரசு முன்வைத்தபோது கடுமையாக எதிர்த்த கட்சிகளில் ஒன்று திமுக. பல மாநிலங்களைப் பின்பற்றி தமிழ்நாட்டில் 2020ஆம் ஆண்டு அப்போதைய அதிமுக அரசு வேலைநேரத்தை அதிகரிக்க முயற்சித்தபோது அதை திமுக கடுமையாக எதிர்த்தது. தமிழ்நாட்டின் தற்போதைய முதலமைச்சரும் அப்போதைய எதிர்கட்சித் தலைவருமான மு.க. ஸ்டாலின், “பா.ஜ.க. அரசின் மக்கள் விரோத, தொழிலாளர் விரோத நடவடிக்கைகளை அப்படியே காப்பி அடித்துவரும் அதிமுக அரசு தமிழகத்தில் அதுமாதிரி எந்த ஒரு தொழிலாளர் விரோத முடிவினையும் எடுக்க, கனவில்கூட எண்ணிப் பார்த்திடக் கூடாது” என்று கூறினார் என்பது குறிப்பிடத்தக்கது.

தொழிற்சாலையில் 12 மணி நேரம் இருக்க வேண்டும் என்றால், அதற்காக வீட்டில் இருந்து புறப்பட்டு வருவது, வேலை முடிந்து வீட்டுக்கு போய் சேர்வது என முன்னும் பின்னுமான ஆயத்த பணிகளுக்கு பல மணி நேரங்கள் தேவைப்படும். உதாரணமாக 9 மணிக்கு பணியை தொடங்க வேண்டிய ஒருவரது வீடு நிறுவனத்தில் இருந்து மிக தூரத்தில் இருந்தால், அதுவும் அவர் பொதுப் போக்குவரத்தை பயன்படுத்தி வரவேண்டும் என்றால், காலையில் 6 7 மணிக்கு எழுந்து தயாரானால்தான் முடியும். இதுபோல் இரவு 9 மணிக்கு பணி முடித்து, புறப்பட்டு வீடு போய், சாப்பிட்டு தூங்க செல்லும்போது 11 - 12 ஆகிவிடலாம். அடுத்தநாள் காலையில் 6-7 மணிக்கு மீண்டும் ஆயத்தமாக வேண்டும்...

இடையே இருக்கும் 7 மணி நேரங்களில்தான் அவர் தூங்க வேண்டும், மனைவி / கணவர் மற்றும் குழந்தைகளுக்கு நேரம் செலவழிக்க வேண்டும். பெண்கள் நிலமை இன்னும் மோசம்.. சமையல், கணவருக்கான பணிவிடைகள், குழந்தைகளை பள்ளிக்கு தயார் செய்வது, வீட்டில் பெரியவர்கள் இருந்தால் அவர்கள் நலன் என பல சுமைகளை முடித்துவிட்டு, தூங்க நேரம் கிடைக்குமா? அது அவர்கள் உடல் ஆரோக்கியத்தை எவ்வளவு பாதிக்கும். இத்தனைக்கும் இடையே பிடித்த பணியைத் தக்கவைக்க நேரம் மட்டுமல்லாது கவனம் கொடுப்பதும் பெண்களுக்குப் பெரும் சவாலாகும். இதன் நீண்ட நாட்கள் விளைவாகஞ் மீண்டும் பெண்கள் வீட்டில் முடங்குவது அதிகமாகும்.

இன்னொரு பக்கம் தற்போது 8 மணி நேரம் மட்டும் வேலை என்ற சட்டம் இருக்கும் போதே பல நிறுவனங்களில் 8 மணி நேரத்துக்கு மேல் 12 மணி நேரம் வரை வேலை வாங்குவது நடைமுறையில் இருக்கிறது. இந்நிலையில் 12 மணி நேரத்துக்கு வேலை வாங்க அனுமதித்தால் என்ன ஆகும்?

12 மணி நேரமோ அதற்கும் அதிகமாகவோ தொடர்ச்சியாக வேலை செய்தால் தொழிலாளியின் ஆரோக்கியம் நிச்சயம் பாதிக்கப்படும். அவர்கள் மன அழுத்தத்திற்கு உள்ளாவர். இதனால், அவரது நலம் மட்டுமல்லாது குடும்பத்தின் நலமும் பாதிக்கப்படும். இதனால்தான், மேற்கு உலக நாடுகள் வாரத்துக்கு 48 மணி நேரம் வேலை என்பதை 36, 35 என்று குறைத்து வருகின்றனர். பல நாடுகள் ஒரு நாளைக்கு 6 மணி நேரமாக குறைத்து, குறைந்த வேலைநேரம் அதிக உற்பத்திக்கு வழிவகுப்பதையும் நிரூபித்திருக்கின்றன. இந்தியாவில் கூட திமுக முன்னாள் தலைவர் கருணாநிதி உட்பட பலர் வேலை நேரத்தை 6 மணி நேரமாக குறைக்க வேண்டும் என்று வலியுறுத்தி வந்துள்ளனர். அறிவியல் கண்டுபிடிப்புகள், நவீன தொழில்நுட்பங்கள், அதிவேக உற்பத்தி கருவிகள் இவ்வளவு வந்துள்ள நிலையில், நியாயமாக மனிதர்களின் உழைப்பு நேரம் குறையத்தானே வேண்டும்?

மனிதன் வாழ்வதற்காகத்தான் உழைக்க வேண்டுமேயன்றி உழைப்பதற்காக வாழக்கூடாது.

**published by PRABHU THILAAK published at No. 5, 5th Street, Soma sundaram Avenue, Shakti Nagar, Porur, Chennai 600116.**

**Owned by PRABHU THILAAK. printed by A. Chandran. Printed at Ayyanar offset, No. 10, Subbarao Nagar, Choolaimedu, Chennai 600094.**

**Editor : PRABHU THILAAK**

